


# அம்புலிமாமா

*நிறுவனர்: 'சக்கரபாணி'* *நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி*



## இசையின் எழில்

குழந்தைகளுக்கு இசையைப் பயில்வித்தால் அவர்களது விஷமங்களும் குற்றங்களும் குறையும் எனப் பெயர் பெற்ற இசை வல்லுநர் ஒருவர் அண்மையில் கூறினார். இசை இயற்கையிலிருந்து வெளிப்படுகிறது என அவர் கூறுகிறார்.

காற்று வீசுவதிலும் நீரின் சலசல ஓட்டத்திலும் இலைகளின் அசைவிலும் இசையைக் கேட்டு உணரலாம். சிங்கத்தின் கர்ஜனை, புலியின் உறுமல், யானையின் பிளிறிடுதல் ஆகியவை முதலில் கேட்கும் போது பயங்கரமாக இருந்தாலும் பின்னர் அவை மதுரமாக ஒலிப்பது போலாகி விடுகின்றன.

ஒரு நகரின் எலிகளை ஒழிக்கக் குழலிசை பயன்பட்டது என்று 'பைட் பைப்பர் ஆர்ப் ஹாமலின்' என்ற ஹன்ஸ் கிரிஸ்டியன் அண்டர்சன் கவிதைப் பாடலிலிருந்து அறிகிறோம். இசை பாடுபவரையும், கேட்பவரையும் மகிழ்விக்கிறது. இந்த மகிழ்ச்சி கிடைக்கையில் வெறுப்பு, விரோதம், பொறாமை, பித்தலாட்டம் ஆகியவற்றிற்கு மனதில் இடம் ஏது? இப்படி நன்மையை அளிக்கும் இசையைப் பேணி வளர்ப்போம்.



**மதிமுகம்: 98** **ஏப்ரல் 1996** **புன்னகை: 4**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**






If you are a subscriber of *Chandamama* (in any language) and if you are between 6 and 16 years of age, you are eligible to enrol yourself a member of the Chandamama Young Scholars' Club. Please fill up the form below and mail it to us, while sending a token fee of Rs. 50 either by M.O. or by bank draft in the name of Chandamama Young Scholars' Club, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026. Alternatively if you subscribe to *Chandamama* (in any language) before May 31, 1996, the offer of membership is open to you. You can then order all six or any number of the *Chandamama* books (see back cover) at 25% discount. Packing and postage will be free. If you order all the six books, you get a discount of 30%. You also get a gift of an attractive badge, a decent-looking Membership Card, Membership Certificate, and a handy notebook. What is more, you can participate in talent contests and different activities which the Club will hold.

Dear Sir,

❑ My *Chandamama* subscription No. is........................Please enrol me a member of the **Chandamama Young Scholars' Club.** I am sending my Membership fee of Rs. 50 by M.O./Draft.

❑ I wish to become a subscriber of *Chandamama* (in.....................................language). I am sending by M.O./Draft. Rs. 110 towards one-year subscription (Rs. 60) and Membership fee (Rs. 50).

*(Tick whichever is applicable)*

Signature

Full Name : ..........................................................................

Name of Parent : ..........................................................................

Mailing Address : ..........................................................................

Permanent Address : ..........................................................................

..........................................................................Date of Birth : ..........................

Class : ..............School : ..........................................................................

செய்திகளும் தகவல்களும்:

# பாலஸ்தீன அதிபர்

அராபியப் பகுதியில் மிகச் சிறிய நாடு பாலஸ்தீனம். அதன் முதல் அதிபராக யாஸர் அராபத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜனவரி 20ந் தேதி நடந்த பொதுத் தேர்தலில் 88 உறுப்பினர்கள் கொண்ட ஒரு கௌன்சில் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதில் அராபத்தின் பதஹ் கட்சிக்கு போதிய பெரும்பான்மை கிடைத்தது.



அராபத்தின் முழுப் பெயர் அப்துல் ரஹ்மான் அராபத் அல் குத்வாய். 1948ல் இஸ்ரேல் நாடு ஏற்பட்டு பாலஸ்தீனியர்கள் தம் தாயகத்திலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். அப்போது அராபத் கெய்ரோ பல்கலைக் கழகத்தில் பொறியியல் பட்டப் படிப்பு படித்துக் கொண்டிருந்தார். அப்போது அவருக்கு வயது இருபது. தம் இனத்திற்கு இழைக்கப்படும் அநீதிகளை அவரால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. தனது பொறியியல் படிப்பை நிறுத்திவிட்டு தனது தாயகத்தை அமைக்கும் பணியில் அவர் ஈடுபட்டார். அவர் பாலஸ்தீன விடுதலை அமைப்பை (பி.எல்.ஓ.) ஏற்படுத்தி சிறிது காலம் அதன் தலைவராக இருந்தார்.

அவர் இஸ்ரேலைத் தாக்க கொரில்லா முறையைக் கடைப்பிடித்தார். அதனால் அவருக்கு பயங்கரவாதி என்றும் தீவிரவாதி என்றும் பெயர் ஏற்பட்டது. அதன்பின் அவர் இஸ்ரேல் படைகளை நேருக்கு நேராகவே தாக்கினார். அதில் அவருக்கு வெற்றி கிடைக்கவே பாலஸ்தீனியர்கள் உற்சாகமடைந்தனர். ஐக்கிய நாடுகள் சபை பாலஸ்தீனத்தைப் பார்வையாளராக அனுமதித்தது. 1974ல் ஐ.நா. பொதுச் சபையில் அராபத் சொற்பொழிவு ஆற்றினார். அப்போது அவரது கையில் அமைதிக்குச் சின்னமான அலிப் ரெம்மனை வைத்துக் கொண்டு "இதை என் கையிலிருந்து விழுந்து விடும்படிச் செய்து விடாதீர்கள்" என்று வேண்டினார்.

இஸ்ரேலும் பி.எல்.ஓவும் ஒன்றை மற்றது அங்கீகரிக்காததால் அவற்றிடையே போர் நடந்து கொண்டே இருந்தது. இரு தரப்பினர்களும் தம் வெற்றி தோல்விகளை அறிவித்த வண்ணம் இருந்தார்கள். இந்த இரு நாடுகளிடையே சமாதானம் செய்து வைக்க சில நாடுகள் முன் வந்தன. அதன் பலனாக 1988ல் அராபத் இஸ்ரேலை ஒரு நாடு என ஏற்பதாக ஐ.நா. சபையில் அறிவித்தார். அதனால் உலக நாடுகளின் ஆதரவையும் பாராட்டுதல்களையும் அவர் பெற்றார்.

1993ல் 'பாலஸ்தீன அதாரிடி' அமைக்கப்பட்டது. இஸ்ரேல், பாலஸ்தீனத் தலைவர்கள் பேச்சு வார்த்தைகளில் இறங்கினார்கள். 1995 செப்டம்பர் 29ல் அராபத்தும் இஸ்ரேலின் அயல் நாட்டு அமைச்சர் சைமன் பெரிஜும் ஒரு ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டார்கள். மேற்குக் கரை, காஜாப் பகுதியிலிருந்து இஸ்ரேல் தன் ஆதிக்கத்தைக் கைவிட்டது. அங்கு பாலஸ்தீனியர் ஆட்சி ஏற்பட்டது. அங்கு ஜனநாயகத்தை நிறுவ ஜனவரியில் தேர்தல் நடந்தது.

பாலஸ்தீனம் மிகப் பழம் நாடு. மேற்குக் கரையில் ஜெரோக்கோவில் 9000 ஆண்டுகளுக்கு முன் மனிதர்கள் வாழ்ந்த ஆதாரம் கிடைத்துள்ளது. இப்போதைய தேர்தலில் அராபத்திற்கு 88 சதவிகித வாக்கும் அவரை எதிர்த்துப் போட்டியிட்ட சமீஹா அலீலுக்கு பத்து சதவிகித வாக்குகளும் கிடைத்தன.

இஸ்ரேலையும் பி.எல்.ஓவையும் சமாதானத்திற்கு வரச் செய்த பெருமை எகிப்தைச் சாரும். சுதந்திரப் பாலஸ்தீனத்திற்கு இதுவே ஆரம்பம் என எகிப்தியத் தலைவர்கள் கருதுகிறார்கள்.



# சுப்பனின் சூழற்பயணம்

சுப்பன் என்பவன் மணலூருக்கு வந்து தனக்கு ஏதாவது வேலை கிடைக்குமா என்று அவ்வூர் கிராம அதிகாரியிடம் கேட்டான். அவரும் ''நீ தனியாள். காலியாக உள்ள காளி யண்ணனின் வீட்டில் இருந்து கொண்டு இவ்வூரில் நாலு வீடுகளில் வேலை செய்து பிழைத்துக் கொள்'' என்றார்.

சுப்பனும் காளியண்ணன் வீட்டிற் குப் போய் ''ஐயா! கிராம அதிகாரி உங்கள் வீட்டில் இருந்து கொண்டு இவ்வூரில் வேலை தேடிக் கொள்ளச் சொன்னார். எனக்குப் பணம் கிடைத்த தும் வீட்டு வாடகையும் கொடுத்து விடுகிறேன். உங்கள் வீட்டில் ஏதாவது வேலை இருந்தாலும் சொல்லுங்கள். செய்கிறேன்'' என்றான்.

காளியண்ணனும் ''காலியாக உள்ள வீட்டை ஒழுங்காக வைத்துக் கொண்டு தினமும் நீ விளக்கேற்றிக் கொண்டிருந்தால் அதுவே போதும். என் வீட்டில் வேலைக்குப் பல வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஏதாவது வேலை இருந்தால் சொல் கிறேன்'' என்றான். எனவே சுப்பனும் ''நானும் வேலை செய்து சம்பாதித்து நான் இருப்பதற்காக வாடகையை யும் எப்படியாவது என்றாவது கொடுத்து விடுவேன்'' எனக் கூறி அந்த வீட்டில் இருந்து கொண்டு வேலை தேடலானான்.

முதலில் அவன் குயிலன் என்ற கவிஞரின் வீட்டிற்குப் போய் வேலை கேட்டான். அவரோ ''என் வீட்டில் வேலை எதுவும் இல்லை. என் மனை விக்கு உதவ ஒரு சிறுமி இருக்கிறாள். நானோ கவிஞன். என் கவிதைக் கேட்டுப் பிறர் அளிக்கும் சன்மானத் தைக் கொண்டு சுகமாக இருக்கிறேன். என் வேலைகளை நானே செய்து கொள்வதுதான் என் பழக்கம். அத

—சிவனார் செல்வன்—

னால் இங்கே வேலையாள் வேண்டிய தில்லை. எனவே நீ வேறு யாரிடமா வது கேட்டுப் பார்'' என்று கூறினார்.

சுப்பனோ ''உங்கள் வீடு பெரிது. வீட்டின் பின்புறம் பெரிய கொல்லைப் புறம் இருக்கிறது. அதில் நான் தோட்ட வேலை செய்கிறேன். உங்களை நம் பித்தான் வந்திருக்கிறேன். என்னைக் கைவிட்டு விடாதீர்கள்'' என்று கெஞ் சினான்.

கவிஞர் ஆச்சரியத்தோடு அவ னைப் பார்த்தார். அவனைப் பார்த்தால் புத்திசாலியாகவும் உழைப்பாளி யாகவும் தெரிந்தது. ஆனாலும் அவர் ''என் தோட்ட வேலையை நானே செய்து கொண்டு வருகிறேன். அது தான் எனக்கு தேகப் பயிற்சி. இந்த வய தில் அந்த தேகப் பயிற்சி கூட இல்லா விட்டால் என் உடல் நலம் கெட்டு விடும். நீ உன் சாப்பாட்டைப் பற்றி கவலைப்படாதே. வேலை கிடைக் கும் வரை தினமும் என் வீட்டிலேயே சாப்பிடு. பகவான் எனக்கு நிறையக் கொடுக்கிறார். அதனால் உனக்கு சாப் பாடு போடுவதால் எனக்கு எவ்வித நஷ்டமும் இல்லை'' என்றார்.

சுப்பனும் அவரை வணங்கி ''நீங் கள் இவ்வாறு கூறியதற்கு மிக்க நன்றி. ஆனால் ஒருவர் வீட்டில் சும்மா சாப் பிடுவது எனக்குச் சற்றும் பிடிக்காது. எனக்குத் தேவைப்பட்டால் சிறு தொகையைக் கடனாகக் கேட்பேன். அதைக் கொடுத்து உதவினால் என்னி டம் நிறையப் பணம் சேர்ந்ததும் அக்



கடனைத் திருப்பிக் கொடுத்து விடு கிறேன்'' என்று கூறி வணங்கி விட்டு வேறொரு வீட்டிற்குச் சென்றான்.

அது ஒரு வியாபாரியினுடையது. அந்த வீட்டிலும் அவன் செய்ய எந்த வேலையும் இருக்கவில்லை. அந்த வியாபாரியும் ''என் வீட்டில் வேலை செய்யப் பல வேலைக்காரர்கள் இருக் கிறார்கள். அதனால் உன்னை வேலைக்கு வைத்துக் கொள்ள முடி யாது. வேண்டுமானால் தினமும் என் வீட்டிற்கு வந்து சாப்பிட்டு விட்டுப் போ'' என்று கவிஞர் கூறியது போலச் சொல்லவே சுப்பனும் கவிஞரிடம் கூறியது போலவே அந்த வியாபாரி யிடமும் கூறிவிட்டுச் சென்றான்.

அவன் அந்த ஊரில் பல வீடுகளுக்



குப் போய் வேலை கேட்டுப் பார்த்தும் ஓரிடத்திலும் வேலை கிடைக்க வில்லை. அவனும் களைத்துப் போய் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்தான். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த கிராம அதிகாரி அவனைப் பார்த்து ''என்னப்பா! ஏதாவது வேலை கிடைத்ததா?'' என்று கேட்டார்.

அதற்கு சுப்பனும் ''இந்த ஊர் மிகவும் முன்னேற்றம் அடைந்தது. இங்குள்ளவர்கள் அவரவர்களது வேலைகளை அவர்களே செய்து கொள்கிறார்கள். அதனால் எனக்கு ஒரு வேலையும் கிடைக்கவில்லை. எல்லோரும் தம் வீட்டிற்கு தினமும் வந்து சாப்பிட்டு விட்டுப் போகச் சொல்கிறார்கள். என்ன செய்வேன்?'' என்றான். கிராம அதிகாரியும் சிரித்தவாறே ''தினமும் ஒரு வீட்டில் சாப்பிடு. பிரச்னை தீர்ந்து விடும்'' என்றார்.

சுப்பனும் ''வேலை செய்யாமல் தண்டச் சோறு சாப்பிட எனக்கு இஷ்டம் இல்லை. பல நாட்கள் பட்டினியாவது கிடப்பேனேயொழிய தண்டச் சோறு சாப்பிட மாட்டேன்'' என்று உறுதிபடக் கூறினான். அதுகேட்டு வியப்படைந்த கிராம அதிகாரி அவன் சாதாரணப்பட்டவனல்ல என்று எண்ணி அவனை அந்த ஊரார் எங்கும் போகவிடக் கூடாது எனவும் நினைத்தார்.

அவர் உடனேயே ஊர்ப் பிரமுகர்களை எல்லாம் கூட்டி, சுப்பனைப் பற்றிக் கூறி ''இவன் தன்மானம் உள்ளவன். எதையும் இனாமாக ஏற்கக்கூடியவனல்ல. எனவே இவனுக்கு நாமெல்லோரும் ஒருநாள் வேலையை ஒரு வீட்டில் செய்ய அனுமதிக்க வேண்டும். இவ்வூருக்கு வந்த இவன் பட்டினி கிடக்கக் கூடாது. வேலை செய்யும் வீட்டில் இவனுக்குச் சாப்பாடு கிடைத்தால் அதை இவன் கண்டிப்பாக ஏற்றுக் கொள்வான்'' என்றார்.

அப்பிரமுகர்களும் அதற்குச் சம்மதிக்கவே சுப்பனுக்கு வேலை கிடைத்து விட்டது. ஒவ்வொரு வீட்டிலும் வேலை செய்து சாப்பிட்டு வரலானான். சாப்பாட்டு பிரச்னை தீர்ந்தாலும் அவன் பலரிடம் சிறு தொகைகளைக் கடன் வாங்கலானான்.

அவற்றை விரைவில் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் அவர் களுக்கு அவன் வாக்களித்து வந்தான். ஆனால் அவ்வூரார் யாருமே அவனி டம் கடனைத் திருப்பிக் கொடுக்கும் படி கேட்கவே இல்லை!

இப்படியாக ஒரு வருடம் கழிந்தது. ஒருநாள் சுப்பன் கிராம அதிகாரியிடம் ''நான் என் ஊருக்குப் போய்விட்டு வருகிறேன். இவ்வூராருக்கு என் னென்ன வேண்டுமென்று தெரிவித் தால் அவற்றைக் கொண்டு வந்து தரு கிறேன்'' என்றான். கிராம அதிகாரியும் ''அப்படி நீ என்ன கொண்டு வந்து கொடுப்பாய்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.



அவனும் ''நான் போகும் ஊரில் பைரவி அம்மன் இருக்கிறாள். அந்த அம்மனிடம் நான் போய் எதைக் கேட்டாலும் கொடுத்து விடுவாள்'' என்றான். அப்போது கிராம அதிகாரி ''அப்படியானால் நானும் உன்னோடு வருகிறேன். எனக்கு இதுவரை குழந் தையே பிறக்கவில்லை. அதனால் அந்த அம்மனிடம் எனக்கு வேண் டிய அந்த வரத்தைக் கேட்கிறேன்'' என்றார்.

சுப்பனோ ''அதுதான் முடியாது. நான் மட்டும் தனியே போய் வேண் டினால்தான் அம்மன் அதைக் கொடுப் பாள். உங்கள் விருப்பத்தைக் கூறுங் கள். அதை அம்மனிடம் கூறி நிறை வேறச் செய்கிறேன்'' என்றான். கிராம அதிகாரியும் ''எனக்குத் திருமணமா கிப் பத்து வருடங்களாகின்றன. ஆனால் இதுவரை குழந்தையே பிறக்க வில்லை. இதற்கு வரம் அம்மனிடம் கேட்க முடிவுமா?'' என்று கேட்டார். சுப்பனும் ''கண்டிப்பாக கேட்டு வரம் வாங்கி வருகிறேன்'' என்றான்.

சுப்பன் ஊருக்குப் போவது அவ்வூர் முழுவதும் பரவவே எல்லோரும் அவனைக் காண ஒன்று கூடினார்கள். சுப்பனும் ''அம்மன் நல்லவர்களான உங்களுக்கு நன்மையே புரிவாள். உங் கள் விருப்பத்தை என்னிடம் கூறினால் நான் அம்மனிடம் அவற்றைக் கூறி நிறைவேறும்படிச் செய்கிறேன்'' என் றான். அவர்களும் ஒவ்வொருவராகத் தாம் விரும்புவதைக் கூறினார்கள். சிலர் தமக்கு வேண்டியதையும் கூறி



னார்கள். சிலர் பாதை செப்பனிடப் பட வேண்டும் என்றார்கள். சிலர் ஊர்க் கோயிலின் மதிலைக் கட்டி கும்பாபி ஷேகம் செய்ய வேண்டும் என விருப் பம் தெரிவித்தார்கள்.

இப்படி எல்லோரும் கூறிக் கொண் டிருக்கையில் அங்கு வந்த ஒருவன் சுப்பனைப் பார்த்து ''ஓகோ! நீ இங்கே தான் இருக்கிறாயா?'' என்று கூறி னான். கிராம அதிகாரியும் கடா மீசை யும் முரடன் போலத் தோற்றமளித்த அவனைப் பார்த்து ''யாரப்பா நீ?'' என்று கேட்டார். அவனும் ''என் பெயர் கட்டையன். என் ஊர் காட்டூர். இவன் ஒரு வருடத்திற்கு முன் எங்கள் ஊரில் இருந்தவன். எல்லோ ரிடமும் கடன் வாங்கி விட்டு அவ் வூரை விட்டுக் கிளம்பு முன் பைரவி அம்மனிடம் ஊராருக்கு வேண்டி யதை கேட்டு வாங்கித் தருவதாக இது போல அங்கும் கூறினான். ஆனால் ஊரார் நம்பாமல் தங்கள் கடன் பாக் கியை வைத்துவிட்டு போகும்படிக் கூறினார்கள். இவனோ இரவோடு இர வாக யார் கண்ணிலும் படாமல் எங் கள் ஊரிலிருந்து வெளியேறி விட் டான். இவனைத் தேடிக் கண்டுபிடித்து இழுத்து வரும்படி என் ஊரார் என்னை அனுப்பினார்கள்'' என்றான்.

கிராம அதிகாரியும் சுப்பனிடம் ''இவன் சொல்வது உண்மையா?'' என்று கேட்கவே சுப்பனும் உண்மை தான் என்றான். அவர் ''ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று கேட்கவே அவ னும் ''நான் பைரவி பக்தன். மக்கள் குறைகளைப் போக்க எண்ணி முதலில் வாழையூர் என்ற ஊருக்குப் போய் அங்கு ஒரு வருட காலம் இருந்தேன். அவ்வூராரிடம் மூவாயிரம் வராகன்கள் கடன் வாங்கினேன். அவர்கள் விருப் பங்களைக் கேட்டபோது அவர்கள் முதலில் தம் கடனைத் தீர்த்து விட்டு ஊரைவிட்டுப் போகும்படிக் கூறினார் கள். நான் அவ்வூரில் சம்பாதித்த பணத்தை ஓரிடத்தில் புதைத்து வைத்தி ருந்தேன். அதை யாரோ திருடி எடுத் துக் கொண்டு விட்டான். அதை அவ் வூராரிடம் கூறியபோது யாரும் நம்ப வில்லை. அதனால் அங்கிருந்து யார் கண்ணிலும் படாமல் காட்டூரை அடைந்து ஒரு வருடம் இருந்து ஆறா

யிரம் வராகன்கள் சேர்த்தேன். அவ்வூராரும் வாழையூர்க்காரர்களைப் போல என்னை ஊரைவிட்டு போக அனுமதிக்கவில்லை. எனவே அவர்களுக்குத் தெரியாமல் இரவில் கிளம்பி வாழையூர் போய் என் கடனை ஒன்றுக்கு இருமடங்காகக் கொடுத்து தீர்த்தேன். அதன்பிறகு இங்கு வந்து ஓராண்டில் பனிரெண்டாயிரம் வராகன்கள் சேர்த்தேன். இதைக் கொண்டு காட்டூரில் நான் வாங்கிய கடன் தொகைக்கு இருமடங்காகக் கொடுத்து கடனைத் தீர்த்து விட்டு என் ஊருக்குப் போய் பைரவி அம்மனிடம் உங்கள் விருப்பங்களைக் கூறி நிறைவேற்ற வேண்டப் போகிறேன்'' என்றான்.



கட்டைய்யனோ ''இதெல்லாம் பொய்'' என்றான். அதற்கு சுப்பன் ''இல்லை கட்டைய்யா! இப்போது ஊருக்கு வந்து எல்லாக் கடனையும் தீர்க்கிறேன்'' என்றான். ''அப்படியானால் இந்த ஊராரின் கடனைத் தீர்க்க எங்கே போவாய்?'' என்று கேலியாக அவன் கேட்டான். அப்போது கிராம அதிகாரி ''கட்டைய்யா! எங்கள் ஊர் வளமானது. நாங்கள் நல்லவர்களை நம்புகிறவர்கள். இவன் இவ்வூரில் வாங்கிய கடன் தொகை பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. இவன் தான் எங்கள் கடனைத் தீர்ப்பதாகக் கூறிக் கொண்டிருந்தான். எனவே இவன் உங்கள் ஊருக்குப் போய் தான் பட்ட கடனை எல்லாம் தீர்த்த பிறகு விட்டு விடு. இவன் தன் ஊருக்குப் போய் பைரவி அம்மனிடம் இந்த ஊராரின் கோரிக்கைகளைக் கூறி நிறைவேற்றும்படி சொல்வான். எங்களுக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது'' என்றார்.

கட்டைய்யனும் ''எங்கள் ஊர்க் கடனைத் தீர்த்த பின் இன்னொரு ஊருக்குப் போய் அங்கு கடன் வாங்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்?'' என்று கேட்டான். கிராம அதிகாரியும் பலமாகச் சிரித்து ''உன் ஊராரைப் போலவும் வாழையூராரைப் போலவும் அவ நம்பிக்கை கொண்டு நாங்கள் எங்கள் கடன் பாக்கியைத் தீர்த்து விட்டு போகச் சொல்லவில்லை. எனவே இவன் வேறு ஊருக்குப் போக மாட்டான். பைரவி அம்மனிடம்

போய் எங்களுக்காக வேண்டுவான். எங்கள் வீடுகளில் தன்னாலான வரை வஞ்சகமில்லாமல் உழைத்தான். தன் சக்திக்கு அப்பாற்பட்ட வேலைகளைச் செய்ய அவன் அம்மனை வேண்டு கிறான். எங்களுக்கு இவனிடம் முழு நம்பிக்கை உள்ளது. நாங்கள் இவனைக் கொஞ்சமும் துன்புறுத்த மாட்டோம்'' என்றார்.

கட்டைய்யன் அதுகேட்டு ஆச்சரி யப்பட்டான். அந்த ஊரார் அவன் எதிர் பார்த்தது போல சுப்பனிடம் கடன் பாக்கியைத் தீர்த்துவிட்டுப் போகச் சொல்லவில்லை. எதுவும் கேளாமல் அவனைக் காட்டூருக்கு அனுப்பச் சம்மதித்தது அவனுக்கு வியப்பையே அளித்தது.

சுப்பன் கிராம அதிகாரிக்கும் ஊரா ருக்கும் நன்றி செலுத்தி விட்டுக் கட்டைய்யனுடன் காட்டூருக்குச் சென் றான். அங்கு தான் வாங்கிய கடனுக்கு இருமடங்காகக் கொடுத்து கடனை எல்லாம் தீர்த்தான். அதன் பிறகு அவன் தன் ஊருக்குச் சென்றான்.

கொஞ்ச காலத்திற்குப் பின் மண லூர் கிராம அதிகாரியின் மனைவி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத் தாள். அவ்வூரில் தீராத வியாதியால் அவஸ்தைப் பட்டவர்கள் குணமடைந் தார்கள். ஊர்க் கிணறுகளின் நீர் உப்பு போய் குடிநீராகியது. பொதுப் பணி களுக்கான பணமும் தாராளமாகக் கிடைத்தது. அதைக் கொண்டு பாதை யைச் செப்பனிட்டார்கள். கோவில் கும்பாபிஷேகத்தையும் சிறப்பாக நடத்தினார்கள். இதெல்லாம் சுப் பனால்தான் என்று எண்ணி மணலூர் வாசிகள் சுப்பனைக் கொண்டாடி அவன் புகழை எங்கும் பரப்பினார்கள். ஆனால் அவர்கள் அவனைத் தேடிக் கண்டுபிடித்துத் தம் ஊரிலேயே வைத் துக் கொள்ள நினைத்தார்கள். ஆனால் அவர்கள் எங்கு தேடியும் அவன் அகப் படவே இல்லை. மணலூர் வாசிகள் அடைந்த நன்மைகளைக் கண்டு காட்டூர்காரர்களும் வாழையூர்காரர் களும் தம் செய்கைகளுக்கு வெட்கப் பட்டனர்.






# 9

(சூரிய பகவானின் பசுக்களைக் கொன்று தின்ற ரூபதரனின் ஆட்களெல்லாம் கடலில் கப்பலோடு மூழ்கி இறந்து போனார்கள். ரூபதரன் நீந்தி ஒரு கடற்கரையை அடைந்து அந்நாட்டு மன்னன் மகாமேதியின் மகள் வாருணியின் உதவியால் அரண்மனையை அடைந்தான். மன்னனும் அவனுக்கு எல்லாவிதத்திலும் உதவுவதாக வாக்களித்தான். அன்றிரவு ரூபதரன் அங்கு நன்கு தூங்கினான். அதன் பிறகு-)

மறுநாள் ரூபதரன் மன்னன் மகா மேதியுடன் அரசசபைக்குச் சென்றான். அந்த சபா மண்டபம் கப்பல் துறைக்கு மிக அருகிலேயே இருந்தது. மண்டபத்தில் நேர்த்தியான கல்லாலான இருக்கைகள் போடப்பட்டிருந்தன. மகாமேதி தன் ஆசனத்தில் அமர்ந்து தன்னருகிலேயே ரூபதரனையும் உட்கார வைத்துக் கொண்டான். ரூபதரனின் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய மகாமேதி தன் ஆட்களில் ஒருவனை அனுப்பினான்.

பிரமுகர்கள் ஒவ்வொருவராக வந்து ஆசனங்களில் அமர்ந்தனர். தம் நாட்டிற்குப் புதிதாக யாரோ வந்திருக்கிறார் எனக் கேட்ட அவர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்களிடம் மன்னன் ''பெரியோர்களே! என் பக்கத்தில் அமர்ந்திருப்பவர்தாம் நம் விருந்தினர். அவர் யாரென்றும் எந்த



நாட்டைச் சேர்ந்தவர் என்றும் எங்கிருந்து வந்தார் என்பதும் எனக்குத் தெரியாது'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

''இவர் தன் பயணத்தைத் தொடர என்னிடம் உதவி கேட்டிருக்கிறார். அதைச் செய்வதாக வாக்களித்திருக்கிறேன். என்னிடம் வந்து உதவி கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லும் பழக்கம் எனக்குக் கிடையாது. இவருக்காக ஒரு புதிய கப்பலைக் கட்டி அதைச் செலுத்த ஐம்பது மாலுமிகளையும் அவர்களுக்கு வேண்டிய பொருள்களையும் கொடுக்க ஏற்பாடுகளைச் செய்து வருகிறேன். இன்று இவர்களுக்கு ஒரு விருந்து நடக்கிறது. அதில் நீங்கள் கலந்து கொள்ள வேண்டும். விருந்திற்குப் பின் இசை நிகழ்ச்சிக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது'' என்றார்.

இவ்வாறு ரூபதரனை யாவருக்கும் அறிமுகம் செய்து வைத்த பின் மன்னன் அவனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான். கப்பல் கட்டப்பட்டு துறைமுகத்தில் கடலில் மிதக்க விடப்பட்டது. அது சரியாக இருக்கிறதா என்று மாலுமிகள் பார்த்துத் திருப்தி அடைந்தார்கள். பின்னர் நங்கூரம் பாய்ச்சி நிறுத்திவிட்டு அவர்கள் விருந்தில் கலந்து கொள்ள அரண்மனைக்குச் சென்றார்கள்.

அரண்மனை சிறப்பாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. விருந்திற்குப் பிரமுகர்கள் வந்து சேர்ந்தனர். அவர்களுக்காக விதவிதமான உணவுப் பண்டங்கள் தயாரிக்கப்பட்டிருந்தன. விருந்து நடந்து கொண்டிருக்கும் போதே பாட ஒரு இசைக் கலைஞரும் வந்து அமர்ந்தார்.

விருந்து ஆரம்பமாகியது. இசைக் கலைஞர் தன் இன்குரலால் பாடல்களைப் பாடலானார். அப்பாடல்கள் ரூபதரனின் வாழ்க்கையோடு சம்மந்தப்பட்டவையாக இருந்தன. ஒரு பாடல் ட்ராய் நகரப் போர் ஆரம்பமாவதற்கு முன் இருந்த நிலையை விவரித்தது. ராஜராஜன் போரின் முடிவு எப்படி இருக்கும் என அறிய மைதோ உள்ள சூரியாலயத்திற்குச் சென்றதும், ட்ராயின் வீழ்ச்சிக்கு

முன்பே அவனது வீரர்களிடையே குழப்பமும் கலகமும் ஏற்படும் எனக் கூறியதும் அப்பாடல்களில் வந்தது. ஒருநாள் சாப்பாட்டின் போது ரூபதரனும் வஜ்ஜிரகாயனும் சண்டையிட்டு ஒருவரை மற்றவர் திட்டியதை ராஜ ராஜன் கேட்டு ரசித்தது ஒரு பாடலில் வர்ணிக்கப்பட்டிருந்தது.



ரூபதரன் அப்பாடலை ஆரம்ப முதலே கவனமாகக் கேட்கலானான். அதில் கூறப்பட்ட சம்பவங்களும் வர்ணனைகளும் அவனுக்குக் கடந்த கால சம்பவங்களை எல்லாம் அவன் மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தின. அவற்றை நினைக்க நினைக்க அவனது வருத்தத்திற்கு எல்லையே இல்லாது போயிற்று.

அப்பாடலைக் கேட்டதும் ரூபதரனுக்குத் துக்கம் பொங்கி வந்தது. கண்களில் நீர் நிறைந்து விட்டது. அதை யாரும் பார்க்காதிருக்கும் போது அவன் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு விட்டான். இப்படி அவன் சில முறைகள் செய்தாலும் அதை யாரும் கவனிக்கவில்லை. ஆனால் மகாமேதி மன்னன் அதை கவனித்து விட்டான்.

அவன் உடனே ''நம் விருந்தை நன்கு ரசித்து உண்டோம். இசையையும் ரசித்தோம். இனி நாம் இசையை நிறுத்திவிட்டு பொழுது போக்காக நம் வழக்கமான விளையாட்டுக்களை ஆரம்பிப்போம். மற்போர், ஓட்டப் பந்தயம், தாண்டுதல் போன்றவற்றில் நம் திறமையைக் காட்டினால் இவர் தம் நாட்டு மக்களிடம் நம்மைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்து கூறுவார்'' என்றான். எல்லோரும் உற்சாகத்தோடு மைதானத்திற்கு ஓடினார்கள்.

அங்கு மக்கள் திரளாகக் கூடி நின்றனர். பல இளைஞர்கள் உற்சாகத்துடன் விளையாட்டுகளிலும் போட்டிகளிலும் கலந்து கொள்ளத் தயாராக நின்றனர். முதலில் ஓட்டப் பந்தயமும் அடுத்து மற்போரும் நிகழ்ந்தன. தாண்டுதல், பளு எறிதல் போன்றவையும் நடந்தன. எல்லாப் பந்தயங்களிலும் யாராவது ஒருவன் முதலாவதாக வந்து கொண்டிருந்தான். மற்போரில் மன்னனின் மகன் முதலாவதாக வந்தான்.



TA-F3



அவன் தன் நண்பர்களிடம் ''நம் சிறப்பு விருந்தினர் அவரது இளம் வயதில் என்னென்ன விளையாட்டுகளை விளையாடினார் என்று அறிந்து கொள்ளலாம். இந்த வயதிலும் இவரது உடல் கட்டுமஸ்தாகத்தான் உள்ளது'' என்றான். அப்போது அவர்களில் ஒருவன் அரசகுமாரனிடம் ''நீயே போய் அவரிடம் கேட்டுப் பார். முடிந்தால் அவரையும் போட்டியில் கலந்து கொள்ளச் சொல்'' என்றான்.

அரசகுமாரனும் ரூபதரனருகே போய் ''ஐயா! தாங்களும் தங்களது இளம் பிராயத்தில் இம்மாதிரிப் போட்டிகளில் கலந்து கொண்டிருப்பீர்கள். இப்போது ஏனோ உற்சாகம் இழந்திருப்பது போலத் தென்படுகிறீர்கள். கவலைப்படாதீர்கள். உங்களை உங்களது நாட்டிற்கு அனுப்ப எல்லா விதத்திலும் உதவுகிறோம்'' என்றான்.

அதைக் கேட்ட ரூபதரன் ''நீங்கள் ஆடும் விளையாட்டுகளை எல்லாம் பார்த்தேன். ஆனால் அதனால் எவ்வித மகிழ்ச்சியும் எனக்கு ஏற்படவில்லை. நான் இப்போது நினைப்பதெல்லாம் என் ஊருக்கு எப்போது போய்ச் சேருவேன் என்பதே'' என்றான். அப்போது இன்னொருவன் ''இதெல்லாம் வெறும் கதை. உங்களுக்கு இந்த மாதிரிப் போட்டிகள், விளையாட்டுகளெல்லாம் தெரியாது போலிருக்கிறது. அதனால்தான் இப்படி 'உம்' மென்று இருக்கிறீர்கள்'' என்று கூறினான்.

அதைக் கேட்ட ரூபதரன் உணர்ச்சி வசப்பட்டு ''சிலர் பார்ப்பதற்கு விகாரமாகத் தோன்றினாலும் அவர்கள் பேசுவது இனிமையாக இருக்கும். ஆனால் பார்ப்பதற்கு அழகாக இருக்கும் சிலர் பேசுவதோ கேட்பதற்கே அருவருப்பாக இருக்கும். இதில் இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவன் நீ என்பது தெரிகிறது. நான் எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்து இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன். ஆனாலும் என் வலிமை எவ்வளவு என்பதை இப்போதே காட்டுகிறேன்'' எனக்கூறி எழுந்தான்.

அங்கிருந்தவர்களெல்லாம் வயதா



போட்டியை வைத்துக் கொள்ளலாம். நான் தயார். யார் போட்டியிட வரு கிறீர்கள்?'' என்று சவால் விட்டான். அதுகேட்டு எல்லோரும் வாயடைத் துப் போனார்கள். ரூபதரன் சாதாரணப் பட்ட வீரனல்ல என்று அவர்களுக்குத் தெரிந்து போயிற்று.

அப்போது மன்னன் மகாமேதி ''ஐயா! பிறர் நம்மைத் தாழ்த்திக் கூறும் போது நம் பெருமைகளை நாமே கூறிக் கொள்வதில் எவ்விதத் தவறும் இல்லை. உங்கள் வலிமையைப் பற்றி யாருமே சந்தேகப்பட முடியாது. நீங் கள் இங்கே இருப்பதே எங்களை கௌரவிப்பது போலத்தான்'' என் றான். பிறகு அவன் ''இங்கு வீரர்கள் மற்போர், வாட்போர், அம்பு எய்தல் ஆகியவற்றில் முழுத் தேர்ச்சி பெற்று விடவில்லை. எங்களுக்கு கப்பல் கட்டுவதிலும், கப்பல்களை ஓட்டுவதி லும் நல்ல தேர்ச்சி உண்டு. இசை, நாட்டியம் போன்ற கலைகளிலும் நாங்கள் உயர்ந்தே இருக்கிறோம். எனவே இவை பற்றி உங்கள் நாட் டில் நீங்கள் எல்லோருக்கும் கூறி எங்களுக்கு பெருமையைச் சேர்க்க வேண்டுகிறோம்'' என வேண்டி னான்.

கிச் சோர்வுற்றிருக்கும் அவன் என்ன செய்து காட்டப் போகிறான் என்று ஆவல் கொண்டார்கள். இளைஞர் களோ கேலியாகச் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

அவன் பெரிய கல்குண்டு ஒன்றை எடுத்து வீசி எறிந்தான். அது அதுவரை மற்றவர்கள் எறிந்த தூரத்தை விட அதிக தூரத்தில் போய் விழுந்தது. அதுகண்டு யாவரும் இவ்வளவு தூரம் பளுவான கல்லை வீசியவர் இந் நாட்டில் யாருமே இல்லை என்று கூறிப் புகழ்ந்தார்கள்.

அப்போது ரூபதரன் ''என்னோடு இதில் மட்டுமல்ல, மற்போரிலும் வாட்போரிலும் போட்டியிட யார் வருகிறார்கள்? அம்பு எய்வதில் கூடப்

இதன் பிறகு நாட்டிய நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. அதில் பங் கேற்ற கலைஞர்களின் திறமையைக் கண்டு ரூபதரன் மகிழ்ந்தான். அவன் மகாமேதியிடம் ''அரசே! இவ்வளவு அற்புதமான நடனத்தை நான் வேறு

எங்கும் கண்டதே இல்லை'' என்று கூறி பாராட்டினான்.

ரூபதரன் இவ்வாறு கூறியது கேட்டு மகாமேதி மிகவும் மகிழ்ந்து போனான். அவன் ரூபதரனுக்கு நேர்த்தியான பட்டாடைகளையும் பரிசாக அளித்தான். அரசகுமாரன் வெள்ளிப் பிடி கொண்ட வாளை தந்த உறையில் வைத்து அதை ரூபதரனுக்கு பரிசாக அளித்தான். அதை ரூபதரன் மிகுந்த முகமலர்ச்சியுடன் ஏற்றான்.

அன்றிரவு சாப்பாடான பிறகு காலையில் பாடிய அதே பாடகன் ட்ராய் நகரின் மரக் குதிரை பற்றிய கதையைப் பாடலாகப் பாடினான். கிரேக்கர்கள், தம் கூடாரங்களுக்கு நெருப்பு வைத்து விட்டுக் கப்பல்களில் ஏறிச் சென்றதிலிருந்து கதை ஆரம்பமாகியது. ட்ரோஜன்கள் கடற்கரையிலிருந்த மரக் குதிரையை நகருக்குள் இழுத்துச் சென்ற கட்டம் வந்த போது ரூபதரன் துக்கம் தாங்க முடியாமல் அழலானான்.

ஏற்கனவே பல முறைகளில் ரூபதரனைக் கவனித்த மகாமேதி மன்னன் ட்ராய்ப் போர் பற்றிய பாடல்களை இசைக் கலைஞன் பாடும் போது ஏன் ரூபதரன் வருத்தப்பட வேண்டும் என யோசிக்கலானான். அப் போருக்கும் அவனுக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது என அவன் மனம் உணர்த்தியது. அவன் ரூபதரனை மேலும் வருந்தும் படிச் செய்ய விரும்பவில்லை.

அதனால் மகாமேதி மன்னன் பாட்டை நிறுத்தச் சொன்னான். பிறகு அவன் ரூபதரனிடம் ''ஐயா! உண்மை என்ன என்று கூறுவீர்களா? தாங்கள் யார்? தங்கள் பெயர் என்ன? தாங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? ட்ராய் போர் பற்றிய பாடல்களைக் கேட்டு ஏன் கண்ணீர் வடிக்கிறீர்கள்? அந்தப் போரில் உங்களுக்கு மிகவும் வேண்டியவர்கள் யாராவது கலந்து கொண்டு இறந்து விட்டாரா?'' என்று கேட்டான்.

—(தொடரும்)



# மேலும் தண்டனையா?

மன்னர் மாதவேந்திரர் தலைநகருக்கு வெளியே சிறைச்சாலையைக் கட்டி அதில் கைதிகளுக்கு நல்ல உணவோடு விளையாடவும், படிப்பதற்கான நூல் நிலையம் ஒன்றையும் அமைத்துக் கொடுத்திருந்தார்.

தலைநகரில் சோமநாதன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் தன்னை ஒரு கவிஞன் எனக் கூறிக் கொண்டு பல நூல்களை எழுதி வெளியிட்டான். ஆனால் அவற்றை வாங்கிப் படிப்பவர் யாருமில்லை. காரணம் அவை கவிதைகளே அல்ல. கன்னாபின்னாவென்று வார்த்தைகளைச் சேர்த்து எழுதப்பட்டவை. அவற்றைப் படித்த ஒரு சிலர் கூட அவற்றைப் படித்ததால் தமக்கு தலைவலி வந்தது கண்டு அவற்றைத் தூக்கிக் குப்பைத் தொட்டியில்தான் போட்டார்கள்.

கவிஞன் தம்மிடமிருந்த நூல்களை என்ன செய்வது என்று யோசித்தான். அவற்றைச் சிறைச்சாலையிலுள்ள நூலகத்திற்கு அன்பளிப்பாகக் கொடுத்து விடத் தீர்மானித்து அவற்றோடு சிறைச்சாலைக்குப் போய் சிறைச்சாலையின் அதிகாரியைக் கண்டு தன் எண்ணத்தைக் கூறினான்.

சிறைச்சாலை அதிகாரிக்கு அந்தக் கவிஞனைப் பற்றி நன்கு தெரியும். அதனால் அவர் ''இங்குள்ளவர்கள் ஏற்கனவே தண்டனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு உங்கள் நூல்களைக் கொடுத்து மேலும் தண்டனை கொடுக்க நான் விரும்பவில்லை'' எனக்கூறி அவற்றை ஏற்க மறுத்து விட்டார்.

பாவம்! சோமநாதனின் முகத்தில் ஈயாடவில்லை. அன்று முதல் அவன் தன்னை கவிஞன் என்று கூறிக் கொள்வதையே நிறுத்தி விட்டான்.





# எதிர்பாராதது!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடு ராத்திரியில் ஏன் இப்படிக் கஷ்டப்படுகிறாய்? இதற்கான பலன் கிடைக்குமா? அல்லது நீயும் விலட்சணனைப் போல கிடைத்த வாய்ப்பைத் நழுவி விடப்போகிறாயா? உனக்கு அவனது கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் மந்திரபுரியை மகாசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மகள் மாலினி. அவள் அழகானவள். தீர வீரச் செயல்கள் புரிபவள். அவள்

## வேதாளம் சொல்லும் கதை



மன்னனுக்குப் பிறந்த ஒரே மகள். மகனே அம்மன்னனுக்கு பிறக்காத தால் அவளை மணப்பவனுக்கு மந்திர புரியும் ஆளக் கிடைக்கும். எனவே பல அரசகுமாரர்கள் அவளை மணக்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

மாலினியோ தன் தந்தையிடம் ''என்னை மணப்பவன் வீர தீரச் செயல் புரிபவனாயும் துணிச்சல் மிக்க வனாயும் இருக்க வேண்டும். நான் வைக்கும் பரீட்சையில் தேறவும் வேண்டும்'' எனக் கூறி அப்பரீட்சை என்ன என்றும் தன் தந்தையிடம் கூறி னாள்.

அப்பரீட்சை பற்றிய விவரங் களைக் கேட்டதும் மன்னன் திடுக் கிட்டான். அவன் ''அம்மா! இந்த மாதிரியான பரீட்சை வைக்க வேண் டாம். இது மிகவும் ஆபத்தானது. இதில் கலந்து கொள்ள யாரும் தயங் குவார்'' என்று சொல்லிப் பார்த் தான். ஆனால் அவள் பிடிவாதமாக அந்தப் பரீட்சைதான் வைக்க வேண் டும் என்று கூறிவிட்டாள்.

மன்னன் யோசனை செய்யவே மாலினியும் ''என்னை உயிருக்கும் மேலாக விரும்புவதாகச் சொல்லும் எந்த வாலிபனும் இந்தப் பரீட்சைக்கு இணங்குவான். நீங்கள் கவலைப் படாதீர்கள்'' என்றாள்.

மன்னனும் அமைச்சருடன் கலந்து ஆலோசித்தான். அவரும் அந்தப் பரீட்சை என்ன என்று அறிந்ததும் ''தாங்கள் இப்பரீட்சையின் விவரங் களைக் கூறாமல் பொதுவாகப் பரீட்சை என்று அறிவியுங்கள்'' என்றார்.

அதன்படியே மன்னன் தன் மகளி டமும் ''சரி. நான் உன்னை மணக்க வருபவர்களுக்குப் பரீட்சை வைக்கப் படும் என அறிவிக்கிறேன்'' எனக் கூறி விட்டுச் சென்றான். மாலினியை மணக்க முன் வருபவர்கள் ஒரு பரீட் சைக்கு உட்பட வேண்டும் என்று மட் டும் அவன் அறிவித்தானேயொழிய அது என்ன பரீட்சை என்று கூற வில்லை. ஏனெனில் அது பற்றிய விவரம் கூறினால் யாருமே மாலி னியை மணக்க முன் வர மாட்டான் என்று மன்னன் உறுதியாக நம்பினான்.

மந்திரபுரியின் பக்கத்தில் சிங்கபுரி

என்ற ஊர் இருந்தது. அங்கு விலட்சணன் என்ற இளைஞன் இருந்தான். அவனுக்குப் பிறக்கும் போதே இரு கைகளும் இருக்கவில்லை. அவனது சிறு வயதிலேயே அவனது தாயும் இறந்து விட்டாள். அவனது தந்தை இரண்டாந்தாரமாக ஒருத்தியை மணந்து கொண்டான்.




இரு கைகளையும் இழந்த விலட்சணனை மாற்றாந்தாய் கொடுமைப் படுத்தி வந்தாள். அவனுக்குச் சாப்பாடு போடுவது வீண் என்றும் அவன் எதற்கும் பயன்படாத உதவாக்கரை என்றும் திட்டி வந்தாள். விலட்சணனின் தந்தையால் தன் இளம் இளைய மனைவியை எதிர்த்துப் பேச முடியவில்லை. அவன் தன் மகன் படும் பாட்டைக் கண்டு மனதிற்குள் குமுறிக் கொண்டிருந்தான்.

விலட்சணனும் ''என் சிற்றன்னை எப்போது பார்த்தாலும் திட்டிக் கொண்டே இருக்கிறாளே. இதற்கு என்றாவது ஒரு முடிவு ஏற்படுமா? நான் உயிர் வாழ்வதே வீண் என்ற இவளது கூற்று சரியல்ல என்று எடுத்துக் காட்ட வேண்டும்'' என மனதில் எண்ணி வந்தான்.

இந்த நிலையில் மாலினிக்கு சுயம் வரம் நடக்கப் போகிறது என்று விலட்சணன் கேள்விப்பட்டான். அந்த சுயம் வரம் எப்படி நடக்கப் போகிறது என்பதைக் காண அவன் மனம் ஆசைப் பட்டது. மேலும் ஏதோ பரீட்சை அரச குமாரர்களுக்கு வைக்கப் போவது பற்றிக் கேட்டு அவன் வேடிக்கை பார்க்கலாம் என்று எண்ணித் தலை நகருக்குச் சென்றான்.

அந்தப் பரீட்சையில் அரசகுமாரர்களைத் தவிர வேறு சில இளைஞர்களும் கலந்து கொள்ள இருப்பதை அவன் கண்டான். அதுவரை பரீட்சை என்ன என்று யாருக்குமே தெரியாது. எல்லோரும் மற்போரோ, வாட்போரோ அல்லது அம்பு எய்தலோ தான் பரீட்சையாக இருக்கும் என்று எண்ணினார்கள்.

பரீட்சைக்கான நேரம் வந்தது. மன்னனும் மாலினியும் அமைச்சர் அச்சுதானந்தரும் வந்து மேடையில் அமர்ந்தார்கள். அப்போது அமைச்சர் எழுந்து நின்று ''அரச குமாரியை



மணக்க முன் வருபவனுக்கு ஒரு பரீட்சை வைக்கப்படுகிறது. அந்த வீரன் கோட்டை மதிலிலிருந்து கீழே குத்தி நிறுத்தப்பட்டுள்ள மூன்று வரிசைக் கத்திகளுக்கு மத்தியிலுள்ள காலி இடத்தில் குதிக்க வேண்டும். காயப்படாமல் குதித்து அந்த இடத்தை அடைபவனே அரசகுமாரியை மணக்கத் தகுதி பெற்றவன்'' என்றார்.

அமைச்சர் இப்படிக் கூறி முடித்ததும் அரசகுமாரர்கள் திடுக்கிட்டார்கள். கோட்டை மதில் உயரமானது. அங்கிருந்து கத்திகள் புதைக்கப்பட்ட இடம் வெகு ஆழம். மூன்று வரிசைக் கத்திகளுக்கு இடையே விடப்பட்ட காலி இடமோ நாலடி சதுரம். காயப்படாமல் அதில் கோட்டை மதில் மீதிருந்து குதிக்க முடியுமா? ஒரு வேளை குதித்தாலும் காயப்படாமல் காலி இடத்தை அடைய முடியுமா? இப்படியெல்லாம் யோசித்துப் போட்டியில் கலந்து கொள்ள வந்தவர்கள் பேசாமல் இருந்தனர்.

அதன் பிறகு அவர்கள் மெதுவாக ''இதுவா பரீட்சை? அரசகுமாரியை மணக்க வாட்போர், மற்போர், அம்பு எய்தல் போன்ற ஏதாவது ஒன்றில் பரீட்சை வைத்தால் அதில் நம் திறமையைக் காட்டலாம். ஆனால் இந்தப் பரீட்சையில் கலந்து கொண்டால் நம் உயிரே போய் விடுமே. இப்படி நம் உயிரைப் பணயம் வைத்து ஏன் இந்த அரசகுமாரியை மணக்க முயல வேண்டும்? உலகில் வேறு அழகான அரசகுமாரிகள் இல்லாமலா போய் விட்டார்கள்?'' என்று தமக்குள் பேசிக் கொள்ளலானார்கள்.

எல்லோரும் அசையாமல் இருந்த இடத்தை விட்டு நகராமல் இருந்தனர். மன்னனோ தன் மனதுள் ''நான் நினைத்தது போல நடக்கிறதே. இந்தப் பரீட்சையின் விவரங்களைக் கேட்டதும் ஒரு அரச குமாரன் கூட இருந்த இடத்தை விட்டு நகரவில்லையே. என் மகளுக்குத் திருமணமே நடக்காதா?'' என்று எண்ணி கவலைப்பட்டான். அந்தப் பரீட்சை நடப்பதை வேடிக்கை பார்க்க வந்த விலட்சணனின் மனதில் திடீரென ஒரு எண்ணம் தோன்றியது. அவன் தன் உயிர் போவதைப் பற்றிக் கவலைப்படாமல் அப்பரீட்சையில்

கலந்து கொள்வது என முடிவு செய் தான்.

அவன் எழுந்து அரசன் முன் போய் நின்று வணங்கி ''அரசே! இந்தப் பரீட் சைக்கு நான் தயார்'' என்று கூறினான். இருகைகளும் இல்லாத விலட்சணன் பரீட்சைக்குத் தயாராக வந்திருப்பது கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டான். இப்படி ஒரு நிலை உருவாகும் என்று அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஒருவேளை அப் பரீட்சையில் அந்த இளைஞன் வெற்றி பெற்று விட்டால் தன் மகள் வாழ்நாள் முழுவதும் ஒரு முடவனோடு வாழ வேண்டி வருமே என்று மன்னன் கவலைப்பட லானான்.

அவன் ஓரிரண்டு நிமிடங்கள் பேசா மல் இருந்து விட்டுப் பிறகு பெருமூச்சு விட்டவாறே ''சரி. பொதுப் பரீட்சை அதனால் யாரும் கலந்து கொள்ள லாம். நீ முயல்வதில் எவ்வித ஆட்சே பணையும் இல்லை'' என்றான். மாலினியோ தன்னை மணக்க எவனாவது அழகிய அரசகுமாரன் அப் பரீட்சையில் கலந்து கொள்ள முன் வருவான் என எதிர்பார்த்தாள். ஆனால் அவ்விதம் யாரும் முன் வரா மல் ஒரு முடவன் பரீட்சைக்கு உட்பட வந்தது கண்டு மனமொடிந்து போனாள்.

ஆனாலும் அவள் மனதில் ''இவன் எங்கே கோட்டை மதில் மீதிருந்து குதித்து கத்தி வரிசைகளுக்கு மத்தி யிலுள்ள காலி இடத்தை காயப்படா மல் அடையப் போகிறான்!'' என்று தனக்குள் கூறிக் கொண்டு ஆறுதல்



உணர்ந்தாலும் அவன் பின்வாங்க வில்லை.

கோட்டையின் கீழே வாட்கள் புதைக்கப்பட்ட இடத்தைச் சுற்றி மக்கள் கூட்டம் நின்றிருந்தது. அது விலட்சணன் எப்போது குதிப்பான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. விலட்சணனும் சற்றும் பயமில்லாமல் மதில் மீதிருந்து குதித்தான். அது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். மறு கணம் கூட்டத்தினர் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். ஏனெனில் விலட்சணன் சற்றும் காயப்படாமல் வாட்களுக்கு மத்தியிலிருந்த காலி இடத்தை அடைந்து விட்டான்!

அதைக் கண்ட மாலினி திடுக்கிட்டாள். முடிவில் தனக்குத் கணவனாகப் போகிறவன் ஒரு முடவனா என்று எண்ணி வருந்தலானாள். மன்னனோ தன் மகளின் தலை எழுத்து இதுவா என எண்ணிப் பெருமூச்சு விட்டான். இவ்வாறு அவர்களிருவரும் எண்ணி வருந்திக் கொண்டிருக்கையில் விலட்சணன் அவர்களிருந்த இடத்திற்கு வந்தான். அவன் மன்னனை வணங்கி ''அரசே! நான் அரசகுமாரியை மணக்கப் போவதில்லை. நான் பரீட்சையில் கலந்து கொண்டது அரசகுமாரியை மணக்கும் நோக்கத்தோடு அல்ல. ஆனால் இப்பரீட்சையில் நான் ஒரு அரிய பரிசைப் பெற்று விட்டேன்'' என்று பணிவுடன் கூறி விட்டு அங்கிருந்து சென்று விட்டான்.



அடையலானாள். அரசகுமாரர்களோ ஒரு முடவன் பரீட்சைக்குத் தயாரெனக் கூறியது கேட்டு அவமானத்தால் தலை குனிந்து கொண்டார்கள்.

ஒரு அரசகுமாரனோ ஆத்திரத்தோடு ''ஓகோ! கைகளில்லாத நீ இந்தக் கோட்டை மதில் மீதிருந்து குரங்கு போலக் குதிக்கப் போகிறாயா?'' என்று கொக்கரித்தான். விலட்சணன் அதைக் கேட்டும் சற்றும் லட்சியம் செய்யாமல் கோட்டை மதில் மீது தன்னை ஏற்றி விடச் சொன்னான். இரு வீரர்கள் அவனுக்கு உதவி கோட்டை மதில் மீது அவனை நிறுத்தினார்கள். அங்கிருந்துதான் குதித்துச் சேர வேண்டிய இடத்தையும் பார்த்தான். அது மிகவும் ஆபத்தான செயலே என்று

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! விலட்சனனின் நடத்தை ஒரு பைத்தியக்காரனுடையதைப் போலத்தானே இருக்கிறது. அரச குமாரியை மணக்கும் நோக்கம் இல்லாத அவன் ஏன் பரீட்சையில் கலந்து கொள்ள வேண்டும்? மேலும் அவன் அப்பரீட்சையில் கலந்து கொண்டதால் ஒரு அரிய பரிசைப் பெற்று விட்டதாகக் கூறினானே. அது என்ன? அரசகுமாரியை மணக்கும் வாய்ப்பு கிடைத்தும் அவன் அதைக் கைநழுவ விட்டது அவனது அறிவீனம்தானே? இக் கேள்விகளுக்கு பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''விலட்சணன் ஒரு முடவன். இளம் வயதில் தாயை இழந்த அவனை அவனது மாற்றாந் தாய் உதவாக்கரை என்று எப்போதும் திட்டி வந்தாள். அவனுக்குத்தான் உதவாக்கரை இல்லை என்று பலர் முன் நிரூபிக்க ஒரு அரிய வாய்ப்பு கிடைத்தது. அதுவே அவனடைந்த பெரும் பரிசு. அவன் பரீட்சையை வேடிக்கை பார்க்கத்தான் வந்தான். அரச குமாரியை மணக்கும் நோக்கத்தோடு அல்ல. கைகளே இல்லாததான் அரசகுமாரியை மணந்து அரசனானால் வாளைக்கூடப் பிடிக்க முடியாதே என எண்ணித்தான் அரசகுமாரியை மணக்கத் தகுந்தவனல்ல என அவன் முடிவு செய்தான். அவன் மக்களிடையே தன் பெயர் பரவி தான் உதவாக்கரை இல்லை என நிரூபித்தது ஒன்றே போதும் என அவன் திருப்தி அடைந்தான். அதனால்தான் அவன் அரச குமாரியை மணக்கவில்லை. அவன் செயல் பைத்தியக்காரத்தனமானது அல்ல. விவேகம் நிறைந்ததே'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# நம்ப வேண்டும்!

வேலு பரமசிவத்தின் வீட்டில் பத்து ஆண்டுகளாக வேலை செய்து வந்தான். ஆனால் அவர் ஆரம்பத்தில் என்ன சம்பளம் கொடுத்தாரோ அதைத்தான் கொடுத்து வந்தார். சம்பளத்தை கொஞ்சம் கூட உயர்த்தவில்லை. அதனால் அவன் அவர் வீட்டில் வேலை செய்வதை விட்டுவிட்டு பெரியசாமி என்பவரிடம் வேலைக்குச் சேர்ந்தான்.

பரமசிவம் கந்தன் என்பவனை வேலைக்கு அமர்த்திக் கொண்டு "பத்து ஆண்டுகளாகவே வேலை செய்த வேலு என்னை நம்பாமல் அந்தப் பெரியசாமியிடம் போய் சேர்ந்து விட்டான் பார். வேலைக்காரன் தன் எஜமானனை நம்பி இருக்க வேண்டும். தெரிந்ததா?" என்றார்.

சில நாட்களுக்குப் பின் கந்தன் வேலுவைச் சந்தித்து "நீ பத்து வருடமாக பரமசிவத்திடம் வேலை செய்தாயே. அவரது நம்பிக்கையைப் பெற வழி சொல்கிறாயா?" என்று கேட்டான். வேலுவும் "வழி எல்லாம் எதற்கு? அவர் மிகவும் நல்லவர். உனக்கு ஒரு தொந்தரவும் கொடுக்க மாட்டார்" என்றான்.

கந்தனும் "அப்படியா? அவ்வாறு நல்லவரை நம்பாமல் நீ ஏன் அவர் வேலையை விட்டுவிட்டு புதியவரிடம் போய்ச் சேர்ந்தாய்? கொஞ்சம் பணம் அதிகமாகக் கிடைக்கிறது என்ற காரணத்தால் தானே" என்று கேட்டான். வேலுவும் "அது காரணமல்ல. பரமசிவம் மிகவும் நல்லவர்தான். ஆனால் நான் அவர் மீது நம்பிக்கை வைத்திருந்தது போல அவர் என் மீது நம்பிக்கை வைக்க வில்லையே. வேலைக்காரன் எஜமானனின் மீது நம்பிக்கை வைப்பது போல எஜமானனும் வேலைக்காரன் மீது நம்பிக்கை வைக்க வேண்டும்" என்றான்.



# பம்பாயுக்கும் அப்பால்



கருத்து: **மீராநாயர்**
ஓவியர்: **கௌதம் சென்**

**முதல் ரயில் பயணம்**

**ந**ம் நாட்டில் முதலாவது ரயில் வண்டி போர்பந்தரிலிருந்து தானேவுக்கு 1853 ஏப்ரல் 16ல் கிரேட் இண்டியன் பெனின்சுலர் ரயில்வேயால் மாலை மூன்றரை மணிக்கு விடப்பட்டது. அந்த வண்டியில் நானூறு பயணிகள் இருந்தனர்.

பழைய போர்பந்தர் ரயில் நிலையம் புதுப்பிக்கப்பட்டு அழகிய விக்டோரியா டெர்மினஸ் ஆனது. இங்கு இருந்த மும்பாதேவி கோவில் மூன்று கிலோ மீட்டர் தொலைவிற்கு நகர்த்தப்பட்டது. இதுதான் பம்பாயின் மும்பாதேவியாம். பம்பாயிலிருந்து விசைப் படகில் கடலில் கொஞ்ச தூரம் போனால் எலிபெண்டாவை அடையலாம். வழியில் புட்சர் தீவைக் காணலாம். இங்கு ராபின் என்ற கசாப்புக்காரர் ஆடு மாடுகளை பம்பாயின் ஆங்கிலேயர்களுக்காக வைத்திருந்தாராம். இன்று இத் தீவு கச்சா எண்ணையை ஏற்றி வரும் கப்பல்கள் நிற்கும் இடமாக உள்ளது.



**விக்டோரியா டெர்மினல்**

எலிபெண்டாவில் யானைகள் இல்லை. குரங்குகள்தான் உள்ளன. போர்த்துக்கீசியர் முதலில் இத்தீவில் கரை இறங்கிய போது யானை வடிவிலுள்ள ஒரு கல் உருவத்தைப் பதினாறாம் நூற்றாண்டில் பார்த்தார்களாம். அதனால் இத்தீவிற்கு அவர்கள் எலிபெண்டா என்று பெயரிட்டார்கள். அந்த யானைக் கல் உருவம் அங்கிருந்து விக்டோரியா கார்டனுக்கு பிரிட்டிஷாரின் ஆட்சியின் போது மாற்றப்பட்டது. அந்த கார்டன் தற்போது ஜீஜா மாதா உத்யான் என அழைக்கப்படுகிறது. அந்த யானைக் கல்லை இன்றும் அங்கு காணலாம். இத்தீவின் துறையில் இறங்கி அரை கிலோ மீட்டர் தூரம் நடந்து சென்றால் செங்குத்தான படிக்கட்டுகளைக் காணலாம். அவற்றில் ஏறி உயரச் சென்றால் சில சிவன் கோவில்களைக் காணலாம். அவை கற்பாறைகளில் குடையப்பட்டவை. இவற்றில் யாவரையும் கவர்வது பெரிய குகை. மூன்று வாசல்களில் ஒன்றில் சென்றால் நாம் காண்பது 5.45 மீ உயரமான மூன்று முகங்கள் கொண்ட சிவபிரானின் உருவச் சிலையே. ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில் புரியும் திரிமூர்த்தியை இது குறிக்கிறது.

**கோவிலில் பழுதடைந்த பல விக்கிரகங்களில் ஒன்று**



**எலிபெணடாவின் புகழ்பெற்ற திரிமூர்த்தி விக்கிரகம். இது சிவனின் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைக் குறிப்பது**



கல்லில் குடையப்பட்ட பல நிகழ்ச்சி உருவங்களில் மிகச் சிறந்தது இராவணன் கைலாச பர்வதத்தை அசைப்பது போலும், சிவபிரான் தன் காலின் கட்டை விரலால் அம்மலையை அழுத்தியவாறு பார்வதி தேவியுடன் சதுரங்கம் விளையாடுவது போலுமுள்ள காட்சி, சிவபிரானின் திருமணம், அர்த்தநாரீஸ்வரர் கோலம் (பாதி ஆண், பாதி பெண்), கங்கா பூமிக்கு வருவது போன்ற காட்சிகள் சேதமடையாமல் இங்கு உள்ளன.

இக்குகை சிவராத்திரியின் போதும் மற்றும் சைவப் பண்டிகைகளின் போதும் ஒளி மயமாக விளங்குகிறது. விழாக்களின் போது கடைகளும் கலை நிகழ்ச்சிகளும் இங்கு இடம் பெறுகின்றன.

இந்தப் பெரிய குகைக்கு அருகே பெரும் சேதமுற்ற இரு குகைகள் உள்ளன. தீவில் இன்னொரு புறமுள்ள குன்றில் சீதாதேவி தேவாலா என்ற குகை உள்ளது. ஒரு காலத்தில் இதில் அழகிய தலைவாசலும் சலவைக் கல் மேடையும் இருந்தன. இவை பாழடையாமல் நன்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

பம்பாய் வாசிகளுக்குப் பிரியமான அலிபாக் கடற்கரை எலிபெண்டா தீவின் தெற்கே கொங்கணக் கடற்கரையோரமாக உள்ளது.



**உள் ஹாலில் பாறை நேர்த்தியான தூணாக வடிக்கப்பட்டுள்ளது**



**சிவனுக்கும் பார்வதிக்கும் திருமணம்**



**கைலாசபர்வதம் மீது சிவபிரான்**

அலிபாக் ஒரு துறைமுக நகராக இருந்தது. இது ஒரு பணக்கார முகம்மதியரால் சீர்ப்படுத்தப்பட்டு கிணறுகள் தோட்டங்கள் எனப் பதினேழாவது நூற்றாண்டில் அமைக்கப்பட்டன. இன்றும் இத் தோட்டங்கள் உள்ளன. இங்கு விளையும் தென்னையும் மாங்காய்களும் கொங்கணக் கடற்கரையிலேயே மிகச் சிறந்தவையாகக் கருதப்படுகின்றன.

அலிபாக் தாலுகாவுள் சௌஸ் நகர் வருகிறது. இது சம்பாவதி என்றும் ரேவதி க்ஷேத்திரம் என்றும் முன்பு வழங்கப்பட்டது. இது ரோமானியர்களோடு வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தது. பதினான்காவது நூற்றாண்டிலும் இது வளமிக்க துறைமுகமாக இருந்தது. போர்த்துகீசியர் இதனைத் தம் வசப்படுத்திக் கொண்ட போது தற்போதைய பெயரில் நல்ல துறைமுகமாக இருந்தது.

**அலிபாக்கின் கடற்கரை**

ஜன்ஜீரா கோட்டை சற்று தூரம் தள்ளி உள்ளது. அக்கோட்டை மதில் சுவர் கடலில் செங்குத்தாக எழுப்பப்பட்டுள்ளது. கி.பி. 1707ல் மலிக் அம்பர் என்ற அபிசீனியன்! 5 மீடர் உயர மதில் கொண்ட கோட்டையைக்கட்டினான். 1489ல் ஒரு அபிசீனியன் (தற்போது எதியோபீயா) முன்னூறு பெட்டிகளை இங்கு இறக்க அனுமதி பெற்றான். அந்தப் பெட்டிகளுள் போர் வீரர்கள் இருந்தது அந்த மன்னனுக்குத் தெரியவில்லை. அத்தீவை அபிசீனியர்கள் கைப்பற்றி 1947வரைத் தம் வசம் வைத்திருந்தார்கள். அதன்பின் அது இந்தியாவோடு சேர்க்கப்பட்டது. அங்கிருந்தவர்கள் தம்மை சய்யது எனக் கூறிக் கொண்டார்கள். பின்னர் இச்சொல் சித்தி எனத் திரித்து அவர்கள் 'சித்திக்கள்' என அழைக்கப்பட்டனர் ஜன்ஜீரா என்பதும் அராபியச் சொல்லான 'ஜஜிராஹ்' என்பதிலிருந்து திரிந்ததே. இதன் பொருள் தீவு என்பதாம்.



**ஜன்ஜீராக் கோட்டை**



# தெய்வ வாக்கு

சாதாரணக் குடும்பத்தில் பிறந்த காமாட்சிக்கு சிறு வயது முதலே நிறைய தங்க நகைகள் அணிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை இருந்து வந்தது. அவளுக்குத் திருமணமாகி கணவன் கந்தசாமியின் வீட்டிற்கு வந்த போதும் அந்த ஆசை அவளை விட்டு அகலவில்லை. கந்தசாமியோ ஒரு ஜமீன்தாரரிடம் சாதாரண குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தான்.

காமாட்சி தனக்குத் தங்க நகைகள் வேண்டும் என்று தினமும் கந்தசாமியை நச்சரிக்கலானாள். ஒரு நாள் கந்தசாமி ''இதோ பார். நான் ஜமீன்தாரரல்ல. ஜமீன்தாரரிடம் கணக்கு வேலை பார்க்கும் குமாஸ்தா. என்னால் நீ கேட்கும் காசு மாலை, அட்டிகை, ஒட்டியாணம் எல்லாம் வாங்கித் தர முடியாது. எனவே உன்னிடமுள்ள நகைகளோடு திருப்தி அடைந்து கொள்'' என்று கூறி விட்டான்.

காமாட்சியால் மேற்கொண்டு தன் கணவனிடம் தங்க நகைகள் பற்றிப் பேச முடியவில்லை. தன் மனதிற்குள்ளேயே அவள் ''என் கணவனிடம் தங்க நகைகளைக் கேட்டுப் பயனில்லை. நான் பொறுமையோடு இருந்து என் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும்'' என எண்ணிக் கொண்டாள். இப்படியே பல வருடங்களாயின. காமாட்சிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அவள் தன் மகனை வளர்த்து நல்ல அரசாங்க வேலையில் அமர்த்தி அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்கும் போது வரதட்சணை நிறைய வாங்கித் தான் தங்க நகைகளைச் செய்து போட்டுக் கொள்வது என்று மனக்கோட்டை கட்டி வந்தாள்.

ஆனால் அவள் நினைத்தபடி எது

—எஸ் சுதா—



சேலையோடு ஒரு நகை கூட இல்லாமல் இருக்கிறாளே. இவள் உனக்கு மனைவியாக இருக்கலாம். ஆனால் என் மருமகளல்ல'' என்று வெடுக்கென்று கூறினாள். அப்போது விமலாவுடன் வந்திருந்த, அவளது தந்தை ''அம்மா! நான் என் நிலையை உங்கள் மகனிடம் கூறி என்னால் வரதட்சணை கொடுக்க முடியாது என்று விளக்கினேன். மாப்பிள்ளைதான் அதெல்லாம் ஒன்றும் வேண்டாம் என்று கூறித் தன் நண்பனின் கல்யாணத்தில் போது அதே மேடையிலே என் மகளை மணந்து கொண்டார்'' என்றார்.

விமலாவின் தாயும் ''நீங்கள் பெரிய மனதுடன் என் மகளை உங்கள் மருமகளாக ஏற்க வேண்டும். அவர்களிருவரும் விரும்பினார்கள். மாப்பிள்ளையும் உடனே கல்யாணத்தை நடத்தி விட வேண்டும் என்றதால் நாங்களும் சம்மதித்தோம்'' என்றாள்.

அப்போது காமாட்சி ''அதற்காக பைசா கூடக் கொண்டு வராத இவளை என் மருமகளாக ஏற்க முடியுமா? முடியாது. பேசாமல் உங்கள் பெண்ணை மட்டும் இங்கே விட்டு விட்டுப் போங்கள். அவளை எப்படி நடத்துவது என்று எனக்குத் தெரியும்'' என்று கூறி விமலாவின் தாய் தந்தையர்களை அப்போதே அவர்களது ஊருக்கு அனுப்பி விட்டாள்.

விமலாவும் அவளது பெற்றோர்களும் வந்த போது கந்தசாமி வீட்டில்வுமே நடக்கவில்லை. காமாட்சியின் மகன் மூர்த்தி ஒரு ஏழைப் பெண்ணைத் தன் பெற்றோர்களிடம் கூடச்சொல்லாமல் திருமணம் செய்து கொண்டு விட்டான். அவ்வாறு செய்து கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. அவனால் அதைத் தள்ளிப் போட முடியவில்லை. அவன் தன் மனைவி விமலாவை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான். அவன் விமலாவிடம் தன் தாயாரைக் காட்டி ''இதோ உன் மாமியார்! அவர் காலில் விழுந்து முதலில் ஆசீர்வாதம் வாங்கிக் கொள்'' என்றான்.

விமலாவும் காமாட்சியின் கால்களில் விழுந்து வணங்கவே அவளோ ''இவளா என் மருமகள்! கட்டின

இருக்கவில்லை. பக்கத்து ஊரில் யாரோ ஒரு சாது வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டு அவரைக் காணப் போயிருந்தான். அவன் மறுநாள் வீட்டிற்கு வந்தபோது மூர்த்தி எல்லாவற்றையும் விவரமாகக் கூறினான்.

கந்தசாமியும் ''சரி, நடந்து போனது பற்றிக் கவலைப்படாமல் நாம் நல்ல விதமாக வாழ்க்கை நடத்த முயல்வோம். உன் அம்மாவைப் பற்றித் தான் உனக்குத் தெரியுமே அவள் ஒரு நகைப் பைத்தியம். அதனால் தன் மருமகள் சீராக அதைக் கொண்டு வரவில்லை, இதைக் கொண்டு வரவில்லை என்று கத்திக் கொண்டே இருப்பாள்'' என்றான்.

காமாட்சிக்கோ விமலா வேண்டாத மருமகளாகி விட்டாள். அதனால் அவள் எதைச் செய்தாலும் காமாட்சி அதில் குற்றம் குறை சொல்லிக் கொண்டே இருந்தாள். வீட்டு வேலைக்காரியை வேலையிலிருந்து நிறுத்தி விட்டு எல்லா வேலைகளையும் விமலாவின் மீதே சுமத்தினாள். அத்தோடு திருப்தி அடையாமல் அவள் விமலாவிடம் ''பைசா கொண்டு வராத உனக்கு இனி ஒரு வேளைதான் தினமும் சாப்பாடு. இந்த விஷயத்தை உன் கணவனிடமோ அல்லது உன் மாமனாரிடமோ கூறினால் உன் மீது ஏதாவது ஒரு பழியைச் சுமத்தி உன்னை வீட்டைவிட்டே துரத்தி விடுவேன்'' என்று பயமுறுத்தினாள்.



விமலாவுக்கு ஒருவேளை சாப்பாடே கிடைத்ததால் ஒரு வாரத்தில் அவள் இளைத்துப் போனாள். அதைக் கண்ட மூர்த்தி ''ஏன் இப்படி இளைத்து விட்டாள்?'' என்று கேட்ட போது அங்கு வந்த காமாட்சி ''அவள் தன் பிறந்த வீட்டை நினைத்து ஏங்குகிறாள் போலிருக்கிறது. அவளை அங்கே அனுப்பி விடு'' என்றாள். மூர்த்தியும் ''ஆகட்டும் அனுப்பலாம்'' என்று கூறினான்.

அன்றிரவு தூக்கம் பிடிக்காமல் விமலா வீட்டின் கொல்லைப்புறத்திற்குப் போய் அங்கு ஒரு கல்லின் மீது உட்கார்ந்து தன் மாமியாரின் அடவாடித்தனம் பற்றி யோசித்துக் கண்ணீர் வடிக்கலானாள். அப்போது



அருகிலிருந்து ஒரு மரத்தின் இலைகள் சலசலக்கவே அவள் தலை நிமிர்ந்து என்னவென்று பார்த்தாள்.

ஒரு பிசாசு அந்த மரத்திலிருந்து குதித்து அவள் முன் வந்து நின்றது. அதைக் கண்டு விமலா பயப்பட வில்லை. பிசாசும் ''கவலைப்படாதே. உனக்கு நான் உதவுகிறேன். உன் பிரச்னை என்ன?'' என்று கேட்டது. அவளும் தன் மாமியாரின் கொடுமை களைத் கூறினாள். அப்போது பிசாசு ''சரி! நாளை முதல் நீ சாப்பிடும் ஆயிரம் சாதப் பருக்கைகளுக்கு ஒரு தங்கப் பருக்கை உன் தட்டில் இருக் கும். ஒருநாள் நீ சாப்பிட்டபின் இர வில் உன் தட்டைத் கழுவி வைக்கும் போது இந்த கணக்கின்படி அதில் தங்கப் பருக்கைகள் இருக்கும். இதை உன் மாமியார் அறியும்படிச் செய். அவள் உனக்கு இரண்டு வேளை சாப் பாடு வயிறு நிறையப் போடுவாள்'' என்று கூறி மறைந்தது.

மறுநாள் காலையில் விமலா முன் தினம் பிசாசு கூறியதைத் தன் கனவில் தன் வீட்டு குல தெய்வம் தோன்றிக் கூறியதாகச் சொன்னாள். அதைக் கேட்ட காமாட்சி ''உண்மையாகவா? அப்படியானால் நீ இப்போது உன் பிறந்த வீட்டிற்குப் போக வேண்டாம்'' என்று கூறி அன்று அவளுக்கு இரண்டு வேளை சாப்பாடு போட்டாள். இரவில் அவள் சாப்பிட்ட தட்டைக் கழுவிக் கவிழ்த்து விட்டு எடுத்துப் பார்த்த போது அதில் இரண்டு தங்கப் பருக்கைகள் இருப்பது கண்டு மகிழ்ந்து போனாள். அவ்விஷயம் முதலில் தெரியாமல் போயிற்றே என்று அவள் வருந்தினாள். அன்று முதல் காமாட்சி விமலாவைக் கடிந்து கொள்ளவில்லை. நிறையச்சாப்பிடச் சொல்லிச் சாதம் போட்டாள். இர வில் அவளுக்கு தங்கப் பருக்கைகள் கிடைத்து வந்தன.

அவற்றைக் கொண்டு அவள் தங்க நகைகளைச் செய்து போட்டுக் கொண் டாள். விமலாவை அவளது பிறந்த வீட்டிற்கு அனுப்பும் எண்ணத்தையே அவள் கைவிட்டு விட்டாள். அவள் நிறையத் தங்கப் பருக்கைகளை அடைய விமலாவை நிறையத் சாப் பிடும் படி வற்புறுத்தலானாள். அது

அவளுக்குச் சிரமமாக இருந்தது.

ஒருநாளிரவு விமலா வயிற்று வலி தாங்க முடியாமல் கொல்லைப் புறத்தில் பிசாசு இருந்த மரத்தின் கீழ் போய் உட்கார்ந்தாள். அவள் முன் பிசாசு தோன்றி ''இப்போது உனக்கு என்ன பிரச்னை?'' என்று கேட்டது. விமலாவும் தன் கஷ்டத்தைக் கூறினாள். அப்போது பிசாசு ''சரி. இனி நீ சாப்பிடும் சாதத்திற்குத் தங்கப் பருக்கை கிடைக்காது. உன் மாமியார் ஒரு வேளை பட்டினி கிடந்தால் அவளது தட்டின் கீழ் ஒரு தங்கக் காசு அவளுக்குக் கிடைக்கும்'' என்றது.

மறுநாள் விமலா தன் மாமியாரிடம் பிசாசு கூறியதைத் தன் குல தெய்வம் கனவில் தோன்றிச் சொன்னதாகக் கூறினாள். அப்போது காமாட்சி ''அப்படியானால் நீ இனிமேல் ஏன் இங்கே இருக்க வேண்டும்? இப்போதே உன் பிறந்த வீட்டிற்குப் போய் விடு'' என்று கூறி அப்போதே ஒரு வண்டியை வாடகைக்குப் பேசி அவளை அனுப்பி விட்டாள்.

அன்று காமாட்சி ஒரு வேளை பட்டினி இருக்கவே அவளுக்கு ஒரு தங்கக் காசு கிடைத்தது. அப்போது அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. சேர்ந்தாற் போல பத்து நாட்கள் பட்டினி கிடந்தால் இருபது தங்கக் காசுகள் கிடைக்குமே. அவற்றைக் கொண்டு ஒரு தங்க ஒட்டியாணம் செய்து கொள்ளலாமே என்று நினைத்தாள்.

அவ்வளவுதான். அவள் பத்து நாட்கள் பட்டினி கிடக்க ஆரம்பித்து விட்



டாள். இரண்டு நாட்கள் கழிந்தன. நான்கு தங்கக் காசுகள் கிடைத்தன. மூன்றாவது நாள் அவளால் பொறுக்க முடியவில்லை. அவளுக்கு அப்போது ஒரு உபாயம் தோன்றியது. அவன் தன் மகனை அழைத்து "மூர்த்தி! நீ போய் நம் வைத்தியரிடம் நான் சாதம் சாப்பிடாமல் கஞ்சி மட்டும் குடித்தால் அதுப் பட்டினி கிடப்பது போலத் தானா என்று கேட்டு வா" என்று சொல்லி அனுப்பினாள்.

தன் தாயாருக்கு இப்படி ஏன் ஒரு சந்தேகம் ஏற்பட்டது என்று யோசித்த வாறே மூர்த்தி வைத்தியரிடம் போய் தன் தாயாரின் சந்தேகத்தைக் கேட்டான். அவரும் தண்ணீர் தவிர வேறு எதைச்சாப்பிட்டாலும் அது சாப்பாடு சாப்பிடுவதற்குச் சமமே என்றும் பட்டினி கிடப்பதாக ஆகிவிடாது என்றும் விளக்கம் கூறி அனுப்பினார்.

மூர்த்தி வீடு திரும்பி வந்த போது காமாட்சி தன் நினைவை இழந்து விழுந்து கிடந்தாள். உடனே மூர்த்தி வைத்தியருக்கு ஆளை அனுப்பினான். அவளைப் பார்த்துக் கொள்ள பக்கத்து வீட்டாரிடம் சொல்லி விட்டு அவன் அப்போதே விமலாவின் ஊருக்குப் போய் அவளை அழைத்துக் கொண்டு மாலையாவதற்குள் தன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

விமலா காமாட்சி படுத்திருப்பதைக் கண்டு அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து "என்ன நடந்தது அத்தை?" என்று கேட்கவே காமாட்சியும் "தங்கம் வேண்டும் என்ற ஆசையால் இந்த நிலையை அடைந்தேன். எனக்குத் தங்கமே வேண்டாம். தங்கம் போல இருக்கும் நீ இங்கே இருந்தாலே போதும்" என்று கண்ணீர் வடித்தவாறே கூறினாள். அது மட்டுமல்ல தனக்காகச் செய்து கொண்ட தங்க நகைகளை எல்லாம் எடுத்து விமலாவுக்கே கொடுத்து விட்டாள்.

அதன்பிறகு அந்தக் குடும்பத்தில் சண்டை சச்சரவு இருக்கவில்லை! எல்லாம் நல்ல விதமாகவே நடக்கலாயிற்று.





# காரணம் இதுவே!

ஒரு நாட்டு மன்னன் நீதி தவறாமல் நேர்மையாய் ஆட்சி புரிந்து வந்தான். ஒருமுறை அவன் வேட்டையாடக்காட்டிற்குச்சென்றான். வேட்டையில் அவன் தன் ஆட்களை விட்டுப் பிரிந்து வெகுதூரம் போய் விட்டான்.

அவன் அங்குமிங்கும் அலைந்து களைத்துப் போனான். அப்போது அவன் கண்ணில் ஒரு ஆசிரமம் தென்பட்டது. அங்கு அவன் சென்ற போது ஒரு முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டான். அவன் அவரிடம் ''சுவாமி! நான் மிகவும் களைத்துப் போயிருக்கிறேன். ஒரே பசியாகவும் உள்ளது. தங்களது ஆசிரமத்தில் தங்கி இளைப்பாறலாமா?'' என்று பணிவுடன் கேட்டான்.

முனிவரும் தன் கண்களைத் திறக்காமலேயே ''தாராளமாக இரு. இந்த நாட்டை ஆளும் மன்னன் நீதி தவறாதவன். நேர்மையானவன். நல்லவன். அதனால் இங்குள்ள எந்த மரத்தின் காயையும் இலையையும் பறித்துப் சாப்பிட்டாலும் இனிப்பாகவே இருக்கும். அவற்றால் உன் பசியைப் போக்கிக் கொள்'' என்றான். மன்னனும் வேப்பங் காய்களையும் இலைகளையும் பறித்து உண்டான். அவை ஒரே தித்திப்பாக இருந்தன.

அவன் சற்று நேரம் அங்கு தங்கி இளைப்பாறி விட்டுத் தன் தலை நகருக்குத் சென்றான். தன் மகிமையை எல்லோரும் அறிய வேண்டும் என்ற விருப்பம் அவனுக்கு ஏற்பட்டது. அதனால் அவன் தன் சமையற்காரர்களிடம் ''இன்று ஒரு விருந்தளிக்கப் போகிறேன். அதில் பரிமாற வேப்பிலைப் பச்சடியும் பாகற்காய் பாயசமும் தயார் செய்யுங்கள்'' என்று கட்டளை இட்டான். அது கேட்டு சமையற்காரர்கள் திகைத்தார்களாயினும் அரசர் ஏதோ ஒரு நோக்கத்

—கி. அருணா—

துடன் தான் அவ்வாறு சொல்கிறார் என எண்ணி மன்னன் கூறியபடி பச்சடியையும் பாயசத்தையும் செய் தார்கள்.

விருந்துக்கு வந்தவர்கள் அவற்றை வாயில் வைத்துமே ''ஐயோ! இதென்ன ஒரே கசப்பு'' என்று கூவி னார்கள். மன்னனும் அவற்றை ருசி பார்த்து விட்டு ஒரே கசப்பாக இருப் பதைக்கண்டு உடனே வேறு ருசியான உணவைச் சமைக்கச் சொல்லி விருந் தினர்களுக்குத் திருப்தியாகச்சாப்பாடு போட்டு அனுப்பினான்.

ஆசிரமத்தில் தான் சாப்பிட்ட எந்த இலையும் காயும் இனித்த போது அரண்மனையில் மட்டும் அவை ஏன் கசக்க வேண்டும் என்று மன்னன் யோசித்துப் பார்த்தான். அவனுக்கு அதற்கு விடை கிடைக்கவில்லை. எனவே அதே ஆசிரமத்திற்குப் போய் முனிவரிடம் அதற்குக்காரணம் என்ன என்று கேட்டுத் தெரிந்து கொள்வது என நினைத்து அங்கு சென்றான்.

அங்கு அவன் முனிவரைக் கண்டு தன் சந்தேகத்தைக் கூறி அதற்குத் காரணம் என்ன என்று கேட்டான். முனிவரும் புன்னகை புரிந்தவாறே ''மன்னா! நீ என்னிடம் வந்து இளைப் பாற இடம் கேட்ட போது உன்னை நான் பார்க்கவும் இல்லை, நீ தான் மன்னன் என்பதும் எனக்குத் தெரி யாது. அதனால் நேர்மையான ஆட்சி யில் எல்லாம் இனிக்கும் எனத் தெரிந் தது. ஆனால் நீ அரண்மனைக்குப் போனதும் உன் ஆட்சியைப் பற்றி கர்வம் கொண்டு உன் மகிமையை எல்லோருக்கும் தம்பட்டம் அடித்துக் கூற விரும்பி நீ விருந்திற்கு ஏற்பாடு செய்தாய். அதனால்தான் இங்கு இனிப்பாக இருந்த வேப்பிலையும் பாகற்காயும் அரண்மனையில் கசந் தன. இப்போது தெரிந்ததா காரணம் என்னவென்று?'' என்றார்.

மன்னனும் ''ஆம். தெரிந்து கொண் டேன். இனிமேல் நான் என்னும் அகந்தை கொள்ள மாட்டேன். அதை விட்டு விட்டேன்'' என்று கூறி அவரை வணங்கி விட்டுச் சென்றான்.






நள்ளிரவில் ஜராசந்தனுக்கு தன் விருந்தினர்களாக வந்த மூவரைப் பற்றிய நினைவு வந்தது. அவன் யாக சாலைக்கு வந்து கிருஷ்ணரையும், பீமனையும், அர்ஜுனனையும் பார்த்து ''ஐயா! நீங்கள் அந்தணர்களா? உங்கள் தோள்களில் வில் உராய்ந்து ஏற்படும் வடுக்கள் உள்ளன. நீங்கள் இந்நகருக்குள் தலைவாசல் வழியாக வரவில்லை. மதில் தாண்டி வந்திருக்கிறீர்கள். இதையெல்லாம் வைத்துப் பார்த்தால் நீங்கள் அந்தணர்களல்ல, க்ஷத்திரியர்கள் என்று தெரிகிறது. உண்மையில் நீங்கள் யார்? எதற்காக இங்கு வந்தீர்களென்று சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

அப்போது கிருஷ்ணர் ''நாங்கள் க்ஷத்திரியர்கள். எங்கள் அபூர்வ சக்தியால் நாங்கள் அந்தணர்களைப் போலத் தென்படுகிறோம். நண்பர்களின் வீடுகளில்தான் தலைவாசல் வழியாகச்செல்ல வேண்டும். விரோதிகளின் வீடுகளுள் வேறு எவ்வழியில் வேண்டுமானாலும் செல்லலாம். உன்னை எதிரியாக கருதுவதால் நாங்கள் மதில் தாண்டி வந்தோம். அதனால்தான் நீ செய்த உபசரிப்புகளை ஏற்க மறுத்தோம். எங்கள் தோள் வலிமையைக் காட்டவே இங்கு நாங்கள் வந்திருக்கிறோம்'' என்றார்.

ஜராசந்தனும் ''நான் எவ்வளவு யோசித்துப் பார்த்தும் உங்களை என் எதிரிகளாக ஏனோ கருத முடியவில்லை. நீங்களே சொல்லுங்கள். நான் எப்படி உங்கள் எதிரியானேன்?'' என்று கேட்டான்.



ணன். இவன் பீமன். அவன் அர்ஜுனன்'' என்றார்.

அதைக் கேட்ட ஜராசந்தன் ''ஓ! உனக்கு பயந்து அரசர்களை எல்லாம் விட்டு விட மாட்டேன். என்னோடு போரிட்டுத்தான் நீ அவர்களை விடுவிக்க முடியும். உங்கள் மூவரில் ஒருவனை நானே தேர்ந்தெடுத்துப் போர் புரிகிறேன்'' என்று கூறி மூவரிலும் கட்டுமஸ்தான பீமனை மற்போர் புரியத் தேர்ந்தெடுத்தான்.

பீமனும் ஜராசந்தனும் மற்போர் புரியலானார்கள். அதைக்காணப் பலர் கூடினார்கள். பயங்கரமான மற்போர் நிகழ்ந்தது. பீமன் ஜராசந்தனின் உடலை இரண்டாகப் பிளந்து பல முறை போட்ட போதிலும் அந்த இரு பாகங்களும் மீண்டும் ஒன்று சேர்ந்து ஜராசந்தனாகி வரவே பீமன் திகைத்தான். அப்போது ஜராசந்தனின் பிறப்பின் ரகசியத்தைக் கிருஷ்ணர் பீமனுக்குத் தெரிவித்ததால் பீமன் ஜராசந்தனின் உடலை இரண்டாகப் பிளந்து தாறு மாறாகப் போட்டான். அத்துண்டுகள் துடிதுடித்து ஒன்று சேர முடியாமல் போக ஜராசந்தன் மடிந்து போனான்.

இதன் பிறகு கிருஷ்ணரும் பீமனும் அர்ஜுனனும் ஜராசந்தன் சிறைப் பிடித்து வைத்திருந்த அரசர்களை யெல்லாம் விடுதலை செய்தார்கள். கிரிவிரஜத்திலுள்ள அந்தணர்களெல்லாம் அந்த மூவரையும் வாழ்த்தினார்கள். விடுதலையான அரசர்களெல்

கிருஷ்ணரும் ''ஒரு மகாத்மா தர்மத்தை நிலை நாட்ட நாங்கள் உன்னோடு சண்டை போட வேண்டுமென்று எங்களை இங்கே அனுப்பினார். ஒரு குற்றமும் புரியாத அரசர்கள் பலரை நீ சிறைப்படுத்தி அவர்களை தினம் ஒருவர் வீதம் பைரவருக்கு பலியிட்டு வருகிறாய். இது மாபெரும் குற்றம். உன்னைக் கொன்று விட்டு அந்த அரசர்களையெல்லாம் விடுவிக்கப் போகிறோம். உன் போல கர்வம் கொண்ட கார்த்தவீரியன் கதி என்ன ஆயிற்று? எனவே மரியாதையாக நீ சிறைப்பிடித்து வைத்துள்ள அரசர்களை எல்லாம் விடுதலை செய். இல்லா விட்டால் எங்களோடு போரிட்டு மடிந்து போ. நான் கிருஷ்

லாம் கிருஷ்ணரை வணங்கி வாழ்த் தினார்கள். கிருஷ்ணரும் ''தருமர் ராஜ சூயயாகம் செய்கிறார். அவருக்கு நீங் கள் உறுதுணையாக இருக்க வேண் டும்'' என்று கூறினார். அதற்கு அவர் கள் எல்லோரும் சம்மதித்தார்கள்.

ஜராசந்தனின் மகனான சகாதேவன் பொற்காசுகளையும் விலையுயர்ந்த பொருள்களையும் காணிக்கையாகக் கொண்டு வந்து கிருஷ்ணரிடம் சமர்ப் பித்தான். அவரும் அவற்றையெல் லாம் ஏற்று அவனை மகத நாட்டின் மன்னனாக அறிவித்துப் பட்டாபி ஷேகமும் செய்து வைத்தார்.

அதன்பின் கிருஷ்ணர் ஜராசந்தனின் ரதத்தில் பீமனையும் அர்ஜுனனையும் உட்கார வைத்துக் கொண்டு இந்திரப் பிரஸ்தத்திற்குக் கிளம்பினார். அவர் பின்னால் விடுதலை அடைந்த அரசர் களெல்லோரும் சென்றனர். கிருஷ் ணர் இந்திரப் பிரஸ்தத்தை அடைந்து தருமரைக்கண்டு ''உன் தம்பிகள் இரு வரும் க்ஷேமமாகத் திரும்பி வந்திருக் கிறார்கள். அவர்கள் ஜராசந்தனைக் கொன்று விட்டார்கள். அவன் சிறைப் பிடித்து வைத்திருந்த மன்னர்களை எல்லாம் விடுவித்து இங்கே அழைத் துக் கொண்டு வந்திருக்கிறார்கள்'' என்றார்.

தருமரும் அவர்களை வரவேற்று தக்கபடி உபசரித்து மரியாதை செய் தான். அவர்களை அவரவர் நாடுகளுக் கும் அனுப்பினார். பிறகு கிருஷ்ணர் தருமரிடம் விடைபெற்றுக் கொண்டு



ஜராசந்தனின் ரதத்திலேயே துவார கைக்குச் சென்றார். சில நாட்களுக்குப் பின் அர்ஜுனன் தருமரிடம் ''என்னி டம் அக்கினி தேவன் கொடுத்த காண் டீபமும், ரதமும் பலவித அஸ்திரங் களும் உள்ளன. நான் திக் விஜயம் செய்து நம் கீர்த்தியை நிலை நாட்டு கிறேன்'' என்றான்.

அது கேட்டு தர்மர் மகிழ்ந்து ஒரு நல்ல நாள் பார்த்து வடக்கில் அர்ஜுனனையும், கிழக்கில் பீமனை யும் தெற்கில் சகாதேவனையும் மேற்கில் நகுலனையும் திக் விஜயம் செய்து வர அனுப்பினார். வட திசை யில் சென்ற அர்ஜுனன் முதலில் புலிந்த மன்னனை வென்றான். பிறகு ஆசர்த்தம் கால கூடம், குளிந்தம்,



யும் கிம்புருஷர்களையும் முறியடித்து வட திசையிலுள்ள ஹரிவர்ஷம் என்ற நாட்டை அடைந்தான்.

அது மாயநகரம் எனவும் அந்நகரில் நுழைபவர்களுக்கு எதுவுமே தென் படாது என்றும் வாயில் காப்பவன் கூறி அவனுக்குத் தேவைப்படுவதைக் கொடுப்பதாகக் கூறினான். அர்ஜுன னும் தருமரின் ராஜசூய யாகத்திற்கு ஏராளமாய் பணம் தேவைப்படுவ தாய்க்கூறவே அவனும் தங்கம், முத்து, ரத்தினம் போன்றவைகளைப் பல குவியல்களில் கப்பமாகக் கொடுத் தான். இவ்விதமாய் நிறையப் பணத் துடன் அர்ஜுனன் இந்திரப்பிரஸ்தத் திற்குத் திரும்பி வந்தான்.

கிழக்கு திக்கில் படையோடு சென்ற பீமன் பாஞ்சால மன்னனை வென்று மிதிலாதிபதியைத் தோற் கடித்தான். தசார்ணவ மன்னனும் பீமனுக்கு அடிபணிந்து அவனது படைத் தளபதியானான். பின்னர் அவன் ரோசமானன் என்ற மன்னனை வென்று சேதி நாட்டை அடைந் தான்.

சேதி மன்னன் சிசுபாலன் தருமர் ராஜசூய யாகம் செய்வது கேட்டு மகிழ்ந்தான். அவன் பீமனைச் சில நாட்கள் தன் விருந்தினனாக வைத் திருந்து நிறைய பணம் கொடுத்து அனுப்பினான். பீமன் அங்கிருந்து கிளம்பிப் பல நாடுகளை வென்று மகத நாட்டை அடைந்தான். அங்கு சகாதேவன் பீமனுக்கு நிறையப் பணம்

சுமண்டலம் ஆகிய மன்னர்களைத் தோற்கடித்து மிக்க பலசாலியான சாகலதீப மன்னனான பிரதி விந்தி யனையும் போரில் வென்றான். பிராக் ஜோதிஷ மன்னனின் படையில் கிரா தர்களும் சீனர்களும் இருந்தனர். அந்த மன்னன் பகதத்தனையும் போர்புரிந்து சமாதானத்திற்கு வரச் செய்தான்.

அர்ஜுனன் பகதத்தனிடம் ''என் தமையனார் ராஜசூய யாகம் செய்து சாம்ராஜ்யத்தை நிறுவப் போகிறார். அதற்கு ஏராளமாகப் பணம் தேவை. நீ அதற்குப் பணம் கொடுக்க வேண்டும்'' எனவே பகதத்தனும் அர்ஜுனன் கேட்ட பணத்தைக் கொடுத்தான். அதனைப் பெற்றுக் கொண்டு அர்ஜுனன் கந்தர்வர்களை

கொடுத்தான். பீமன் மேலும் பல நாட்டு மன்னர்களை வென்று தங்கம், வெள்ளி, முத்து, பவளம், ரத்தினம் என்று நிறையச் சேர்த்துக் கொண்டு இந்திரப் பிரஸ்தத்தை அடைந்தான்.

தென்திசையில் சென்ற சகாதேவன் சூரசேனம், மத்ஸ்யம் ஆகிய நாடுகளின் மன்னர்களை வென்று தன் மாமனான குந்திபோஜனையும் கண்டான். அவனிடம் தருமரின் ராஜசூய யாகம் பற்றி சகாதேவன் கூறவே குந்திபோஜனும் மகிழ்ந்து போய் ஏராளமான பணத்தைக் கொடுத்தான். அவன் மேலும் பல நாட்டு மன்னர்களை வென்று மாகிஷ்மதிபுரத்தை அடைந்தான். அதன் மன்னனோடு சகாதேவன் போர் புரிகையில் அவனது படை ஒரு தீ விபத்தில் சிக்கியது.

இதற்கு ஒரே காரணம் உண்டு மாகிஷ்மதி மன்னன் நீலனின் மகளைக் கண்ட அக்கினி தேவன் அவளது அழகில் மயங்கி அந்தணன் வடிவில் அவளை அணுகினான். இதைக் கண்ட நீலன் அந்தணனாக வந்த அக்கினியை தண்டித்தான். அப்போது அக்கினி தன் சுய உருவத்தைக் காட்டவே நீலன் அவனை வணங்கித் தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். அவன் தன் மகளை அக்கினி தேவனுக்கு முறைப்படித் திருமணம் செய்து வைத்தான். அவன் தனக்கும் தன் நகருக்கும் ஆபத்து நேராமல் காக்க வேண்டுமென்று அக்கினி தேவனை



வேண்டவே அவனும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தான். அது முதல் மாகிஷ்மதிபுரத்தை யாராவது தாக்கினால் அக்கினி தேவன் அவனது படையை எரிக்கலானான்.

சகாதேவன் அக்கினி வளர்த்து ஹோமம் செய்து அக்கினி தேவனை வழிபட்டான். அக்கினி தேவனும் அதனால் மகிழ்ந்து நீலனை சகாதேவனுக்கு அறிமுகம் செய்து வைத்தான். நீலனும் அவனுக்கு ஏராளமான பணத்தைக் கொடுத்தான். சகாதேவன் மேலும் தென் திசையில் சென்று கலிங்கம், ஆந்திரம், கேரளம் ஆகிய நாட்டு மன்னர்களிடம் தன் தூதர்களை அனுப்பினான். அவர்களும் அவனுக்குக் கீழ்ப் படிந்து

கப்பம் செலுத்தினார்கள். பிறகு அவன் கடற்கரை ராட்சஸ மன்னனான விபீஷணனிடமிருந்தும் கப்பம் பெற்று இந்திரப் பிரஸ்தத்திற்குத் திரும்பி வந்தான்.

மேற்கு திசையில் சென்ற நகுலன் ரோஹிதக மன்னனான மயூரனைத் தோற்கடித்தான். அங்கிருந்து சைரிபகம், மஹேத்தம் ஆகிய நாடுகளை வென்று விட்டு தசார்ணசிபி, திரிகர்த்த, அம்பரிஷ, மாளவ நாடுகளையும் தோற்கடித்தான். அவர்களிடமிருந்து ஏராளமான பணம் பெற்று துவாரகைக்கும் சென்று கிருஷ்ணரைக் கண்டான். அங்கிருந்து சாகலபுரம் போய் தன் மாமனான சல்லியனிடம் தன் தமையன் செய்யவிருக்கும் ராஜசூய யாகம் பற்றிக் கூறினான். சல்லியனும் அது கேட்டு மகிழ்ந்து பல பொருள்களைக் கொடுத்தான்.

அவன் மேலும் பல அரசர்களை வென்று ஏராளமான பணத்துடன் இந்திரப்பிரஸ்தத்திற்குத் திரும்பி வந்தான். இவ்வாறு நான்கு தம்பிகளின் திக் விஜயத்தால் தருமரிடம் ஏராளமான பணம் சேர்ந்து விட்டது. அவர் ராஜசூய யாகம் செய்வதற்கான ஏற்பாடுகளை கவனிக்கலானார். ராஜசூய யாகம் என்பது சாதாரணப்பட்ட யாகமல்ல. அது சற்றும் தடைபடாமல் நடந்தேற வேண்டும். தடைப்பட்டாலோ மாபெரும் போரே நிகழும். எனவே அது பாதியில் நின்று விடக் கூடாது.

அதுமட்டுமல்ல. தருமரின் நண்பர்களான அரசர்களும் கப்பம் கட்டும் சிற்றரசர்களும் வருவார்கள். ரிஷி முனிவர்களும் வேத விற்பன்னர்களும் வருவார்கள். அவர்களை எல்லாம் தக்கபடி உபசரித்துத் தங்க வசதி செய்து கொடுத்து அவர்களுக்கு எவ்விதக் குறையும் இல்லாமல் கவனித்துக் கொள்ள வேண்டும்.

இவற்றையெல்லாம் தருமர் தம் தம்பிகளிடம் கூறி எல்லா ஏற்பாடுகளைச் சரியாகச் செய்யச் சொன்னார். அவர்களும் அவற்றைச் செய்வதில் முனைந்தனர்.



## அம்புலிமாமா செய்திகள்

# மரங்களின் திருமணம்!

படிக்க வேடிக்கையாக இருக்கிறதா? உண்மையில் இத்திருமணம் கேரளாவில் பாலக் காட்டருகே மலக்குளத்தில் நடந்தது. பதிமூன்று ஆண்டுகளுக்கு முன் கேளன் என்ற விவசாயியும் வேலப்பன் என்ற ஆசிரியரும் ஒரு அரச மரக் கன்றையும் ஒரு வேப்ப மரக் கன்றையும் நட்டார் கள். இருவரும் இணைபிரியாத நண்பர்கள். அதனால் கேளன் தன் மகன் போல வளர்த்து வரும் அரச மரத்தை வேலப்பன் தன் மகள் போல வளர்த்து வரும் வேப்ப மரத்திற்குத் திருமணம் செய்து வைப்பதாகக் கூற, வேலப்பனும் அதற்குச் சம்மதித்தான். பதிமூன்று வருடங்கள் கழிந்தன. வேலப்பன் திடீரென இறந்து விட்டான். ஆனால் கேளன் தன் நண்பன் வளர்த்து வந்த வேப்ப மரத்தை அக்கரையுடன் கவனித்துப் பாதுகாத்து வந்தான். அப்பகுதியில் மக்கள் அரசமரத்தைச் சிவபிரானாகவும் வேப்ப மரத்தை பரசுராமரின் தாயராகிய ரேணுகா தேவியாகவும் கருதி வந்தார்கள். எனவே மலக் குளத்து மக்கள் அந்த இருமரங்களையும் பூசித்து வந்தார்கள். சிலர் அம்மரங்கள் பாதையின் குறுக்கே இருக்கிறதென வெட்ட வந்தபோது பலர் தடுத்தனர். அதன்பின் அந்த மரங்களுக்கும் திருமணம் நடத்தத் தீர்மானித்து முகூர்த்த நாளில் இரு மரங்களுக்கு மாலைகள் போட்டு மேள தாளத்துடன் தங்கத்தாலி கட்டி நானூறு பேர்களுக்குக் கல்யாண சாப்பாடும் போட்டார்கள். நண்பன் நடத்திய இத்திருமணத்தால் வேலப்பனின் ஆத்மா கண்டிப் பாக சாந்தி அடைந்தே இருக்கும்.

# ஏழை எளியவர் வாகனம்!

நாற்பது ஆண்டுகளுக்கு முன் சைகிள் வைத் திருப்பது பெருமை என்னும் ஏழைகளின் வாகனம் என்றும் கருதப்பட்டது. ஆனால் இன்றோ மோபெட், ஸ்கூட்டர், மோட்டார் சைகிள், சிறிய கார்கள் எனப் பல வாகனங்கள் பலரால் பயன்படுத்தப்படுகின்றன. இவை முன் பெல்லாம் ஒரு சில பணக்காரர்களாலே வாங் கப்பட்டன. இன்றோ எளிதில் எல்லோரும் வாங்குகிறார்கள். ஆனாலும் 1979லிருந்து சைகிள்களின் தயாரிப்பு அதிகரித்தே வந்திருக் கிறது. 1994ல் உலகில் மொத்தம் 110,000,000 சைகிள்கள் தயாரிக்கப்பட்டன. இவற்றில் சீனாவில் மட்டும் 43,000,000 சைகிள்கள் தயாரானவை. சைக்கிள் தயாரிப்பில் உலகில் நம் நாடு இரண்டாவது இடம் வகிக்கிறது.

சைகிள்களுக்கு அதிக கிராக்கி இருக்கக் காரணம் அவற்றைக் கையாள்வது எளிது. அதனை ஓட்ட பெட்ரோல் போன்ற எரி பொருள் தேவை இல்லை. சத்தமோ, புகையோ கிளம்பி சுற்றுப் புறச் சூழலை மாசுபடுத்துவ தில்லை. பெட்ரோல் பயன்படுத்தும் வாகனங் கள் பாதுகாக்கப்பட்ட இடங்களிலும், சில தொழிற்சாலைகளிலும், சில பல்கலைக் கழ கங்களிலும் உள்ளே நுழைய அனுமதிக்கப் படுவதில்லை 400 அமெரிக்க நகரங்களில் ரோந்து சுற்றும் காவலர்களுக்கும், தபால் காரர்களுக்கும் சைகிள்களே கொடுக்கப் பட்டுள்ளன. நம் நாட்டிலும், மும்பயி, புனே, டில்லி ஆகிய நகரங்களிலும் ஏராளமான சைகிள்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

# கதம்ப மரம்

விஷ்ணு பகவானின் வாகனமான கருடன் அமிர்தக் கலயத்தை தன் அலகுகளில் பற்றிக் கொண்டு பூவுலகின் மீது பறந்து சென்ற போது அது இளைப்பாற ஒரு கதம்ப மரத்தடியே தங்கியதாம் அப்போது அது தன் அலகை அந்த மரத்தின் மீது தேய்த்ததாம். அலகில் ஒட்டி இருந்த அமிர்தம் அந்த மரத்தின் மீது பட்டதால் கதம்ப மரம் முன்னூறு ஆண்டு காலத்திற்கு இருந்தது என்பது ஒரு புராணக் கதை.

நறுமணத்தை எங்கும் வீசும் கதம்ப மலர் கள் என்றால் ஸ்ரீ கிருஷ்ணருக்கு மிகவும் பிரியமாம். அவர் குழல் இசைத்தவாறே கோபிகாஸ்திரீ களுடன் கதம்ப மரத்தடியேதான் சஞ்சரித்து வந்தாராம்.

வசந்த காலத்திற்கு முன்பே கதம்ப மரங்கள் பூக்க தொடங்கி விடுகின்றன. தங்க நூல் போன்ற ஒரு உறுதியான காம்பில் நான்கைந்து மலர்கள் மலர்கின்றன. இதன் இலைகள் அடர் பச்சை நிறத்தில் மிக அகலமாக இருக்கும். இம்மரங்கள் கடலோரப் பகுதிகளிலும் இமய மலைச்சாரலின் பரந்த வெளிப் பிரதேசத்திலும் நன்கு வளர்கின்றன.

கதம்ப மரத்தைப் பற்றிய இன்னொரு கதையும் உண்டு. ஒரு வியாபாரியின் வீட்டில் ஒரு கதம்ப மரம் இருந்தது. அவனுக்கு ஏழு மகன்கள் இருந்தனர். கடைசி மகன் எப்போதும் அந்த மரத்தின் கீழ் உட்கார்ந்து கொண்டு புல்லாங்குழல் வாசித்துக் கொண்டே இருப்பான்.

வியாபாரிதன் வியாபார விஷயமாக அயல் நாட்டிற்குக் கிளம்பிப் போனான். அச்சமயம் தம்பியின் மீது கோபம் கொண்டு மற்ற சகோதரர்கள் தம் வீட்டுக் கதம்ப மரத்தை வெட்டி எறிந்து விட்டார்கள். கடைசி மகன் இதனால் வருந்தி அருகிலிருந்த காட்டிற்குச் சென்று விட்டான். அயல் நாட்டிலிருந்து திரும்பி வந்த வியாபாரி நடந்தைக் கேட்டு மிகவும் வருத்தப் பட்டான். இதன் பிறகு அவனது செல்வமும் குறைந்து கொண்டே போயிற்று. வியாபாரியின் கனவில் அதிர்ஷ்ட தேவதை தோன்றி "உன் கடைசி மகன் வீட்டிற்கு வந்தாலே மீண்டும் உனக்குச் செல்வம் கிடைக்கும்" எனக் கூறியது. வியாபாரியும் காட்டிற்குப் போய்த் தன் இளைய மகனை அழைத்து வந்தான். இளைய மகன் வந்து புல்லாங்குழல் வாசித்ததும் வெட்டப்பட்ட கதம்ப மரத்தில் துளிர்கள் தோன்றி அது நன்கு வளர்ந்ததாம். அக்குடும்பம் முன்போலச் செல்வத்தை அடைந்ததாம்.



நம் நாட்டு முனிவர்கள் - 10

# சத்தியகாமர்

காட்டில் ஓடிய அந்த நதியின் மேற்குக் கரையில் கௌதம முனிவர் தம் ஆசிரமத்தை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார். அங்கு அவர் தம் பல சீடர்களுக்குக் கல்வி போதித்து வந்தார். அவரிடம் கல்வி பயில மாணவர்கள் வெகு தூரத்திலிருந்து கூட வந்து அந்த ஆசிரமத்தில் குருகுல வாசம் செய்து பயின்று வரலானார்கள்.

அச்சீடர்கள் தினமும் சூரியோதயத்திற்கு முன்பே எழுந்து, குளித்து, சூரிய நமஸ்காரம் செய்து குரு கற்றுக் கொடுக்கும் வேத மந்திரங்களை அத்தியயனம் செய்து வரலானார்கள்.

இதையெல்லாம் நதியின் கிழக்குக் கரையிலிருந்து ஒரு சிறுவன் கவனித்து வந்தான். அவன் பெயர் சத்தியகாமன். அவன் தன் தாய் ஜாபாலையுடன் ஒரு குடிசையில் இருந்து வந்தான். அவனது தாய் காட்டிற்குள் போய் உலர்ந்த கட்டைகளை எடுத்து வந்து அருகேயுள்ள ஊரில் விற்று வாழ்ந்து வந்தாள்.

ஒருநாள் சத்தியகாமன் நதியில் நீராடும் போது எதிர்க்கரையில் பல மாணவர்கள் வேத அத்தியயனம் செய்து கொண்டிருப்பதைக் கண்டான். அவன் தன் வீட்டிற்குப் போய் தன் தாயிடம் ''அம்மா! எனக்கு அந்த சீடர்களைப் போலப் படிக்க



ஆசையாக இருக்கிறது'' என்றான். தாயா ரும் ''இதற்கு அந்த முனிவரிடம் அனுமதி கேள்'' என்றாள்.

சத்தியகாமனும் எதிர்க்கரையிலுள்ள ஆசிரமத்திற்குப் போய் கௌதமரை வணங்கி ''ஐயா! என்னையும் தங்களது சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினான். அவரும் ''உன் குலமும், கோத்திரமும் என்ன?'' என்று கேட்கவே அவன் தனக்குத் தெரியாது என்றான்.

அவர் ''உன் தந்தையின் பெயர் என்ன?'' என்று கேட்கவே அவன் ''அது வும் எனக்குத் தெரியாது. சிறு வயது முதல் என் தாயார் தான் என்னை வளர்த்து வருகிறாள்'' என்றான். அவரும் ''அப்படி யானால் உன் தாயாரிடம் போய் உன் தந்தையின் பெயர் என்ன என்று கேட்டு அறிந்து வா'' என்று கூறி அனுப்பினார்.

சத்தியகாமனும் போய்த் தன் தாயாரி டம் தன் தந்தை பற்றிக் கேட்கவே அவளும் ''நீ பிறப்பதற்கு முன் நான் பலர் வீடுகளில் வேலை செய்தேன். ஒரு வீட் டில் வேலை செய்யும் போது என் போல் வேலை செய்யும் ஒரு ஆடவனைக் கண்டேன். நான் அவரை மணந்த பின் அவர் ஒரு விபத்தில் மாண்டு போனார். அவர் பெயர் கூட எனக்குத் தெரியாது. அதன் பின் நான் இங்கு வந்தேன் நீயும் பிறந்தாய்'' என்றாள்.

சத்தியகாமன் கௌதம முனிவரின்



ஆசிரமத்திற்குப் போய்த் தன் தாயார் கூறியதை எதையும் மறைக்காமல் சொன் னான். அதைக் கேட்ட முனிவர் புன்னகை புரிந்து ''எங்கும் எந்நிலையிலும் உண் மையைக் கூறுபவனே அந்தணன். உண் மையைக் கூறிய நீ அந்தணனே'' என்று கூறி ஆசீர்வதித்து அவனைத் தன் சீட னாக ஏற்றார்.

சத்தியகாமனும் கௌதமரிடம் வேத அத்தியயனம் செய்து சிறந்த சீடனாக விளங்கிப் பிற்காலத்தில் பெயர் பெற்ற குருவாகவும் விளங்கினான்.

முன் காலத்திலும் குலம் கோத்திரம் என்று வேற்றுமை பாராட்டப்படவில்லை என்பதற்கு இதுவே ஒரு எடுத்துக்காட்டு.

# உங்களுக்குத் தெரியுமா?

1. நமீபியாவின் முந்தையப் பெயர் என்ன?
2. கி.பி. 50ல் கிருஸ்துவமதத்தை நம் நாட்டில் பரப்ப வந்தவர் யார்?
3. வரலாற்றுப் புகழ் பெற்ற எகிப்திய ராணி க்ளியோபாட்ரா எந்த நாட்டைச் சேர்ந்தவர்?
4. பாட்மிண்டன் போல முன் நாட்களில் நம் நாட்டில் விளையாடிய விளையாட்டு எது?
5. யூதர்களின் புனித நூல் எது?
6. நம் நாட்டில் முதன் முதலில் 'போலீயோ கிளப்' எப்போது அமைக்கப்பட்டது? அதன் பெயர் என்ன?
7. இரண்டாவது உலகப் போரின் போது இத்தாலியின் ஆட்சித் தலைவராக இருந்தவர் யார்?
8. விளையாட்டுகளில் சிறந்து விளங்குபவருக்கு நம் நாட்டில் அளிக்கப்படும் விருது எது?
9. முதன் முதலில் 'ஒலிம் பாய்ட்' எங்கு நடந்தது? தற்போதைய ஒலிம்பிக் போட்டிகள் முதலில் எங்கு நடந்தது?
10. அழிந்து வரும் பாலுண்ணிப் பிராணிகள் நம் நாட்டில் எங்கு உள்ளன?
11. வண்ணங்களுக்கு ஆதாரமான மூன்று வண்ணங்கள் யாவை?
12. மனிதகுல ரட்சகர் என்று எந்த முகலாய மன்னருக்குப் பெயர் வந்தது?
13. தரையிலிருந்து விண்வெளிக்குச் சென்றவர்கள் முதலில் சந்தித்துப் பேசியது எப்போது?
14. ரஷ்ய எழுத்தாளர் டால்ஸ்டாயின் பிறப்பிடம் எது?
15. 1826 ஜுலை 3ல் இறந்த இரு அமெரிக்க ஜனாதிபதிகள் யார்?
16. நம் நாட்டில் மாநிலங்களின் மறு அமைப்பு எப்போது ஏற்பட்டது?
17. ஐரோப்பாவில் மிக நீளமான நதி எது?
18. ரயில் பெட்டிகளைத் இணைத்துத் தயாரிக்கும் தொழிற்சாலை எங்குள்ளது?

# விடைகள்

1. மேற்கு ஆப்பரிக்கா
2. செண்ட். தாமஸ்
3. கிரீஸில் மேசிடோனியா
4. அம்மானை
5. டோரா
6. அஸ்ஸாமில் 'காபல் க்ளப்'
7. பெனிடோ முசலோனி
8. அர்ஜுன விருது
9. முதலாவது ஒலிம்பாய்ட் கி.மு. 77ல் தற்போதைய ஒலிம்பிக் போட்டிகள் 1896ல் ஏதன்ஸில் ஆரம்பமாகியது
10. பாதரசம்
11. சிவப்பு, நீலம், மஞ்சள்
12. அக்பர்
13. 1965 டிசம்பர் 15
14. யாஸ்னாயா போலியோனா
15. ஜான் ஆடம்ஸ், தாமஸ் ஜெஃபர்ஸன்
16 1956
17. வால்காநதி
18. சென்னையிலுள்ள பெரம்பூரில்



# உத்தேசம் இதுவே

விசாலபுரியின் மன்னன் வீரேந்திரன். அவனது மகள் விசாகதத்தை. அவள் மிகவும் அழகானவள். திருமணவயதை அவள் அடையவே மன்னன் அவளுக்கு ஏற்ற அரசகுமாரரைத் தேடலானான். இச்சமயத்தில் ஒருநாள் திடீரென விசாகதத்தை காணாமல் போய் விட்டாள்.

எங்கு தேடியும் அவள் காணாது போகவே மன்னன் மந்திரவாதிகளை அழைத்து மை போட்டுப் பார்க்கச் சொன்னான். அவர்களும் மை போட்டுப் பார்த்து விட்டு ''அரசே! இளவரசியை ஒரு கொடிய ராட்சஸன் தூக்கிக் கொண்டு போய் நம் நாட்டின் தென் பகுதியிலுள்ள பயங்கரக் காட்டில் ஒரு பெரிய மாளிகைக்குள் அடைத்து வைத்திருக்கிறான். அவன் இன்னும் மூன்று மாதத்திற்குப் பிறகு அவளை மணந்து கொள்ளப் போவதாகக் கூறிக் கொண்டிருக்கிறான்'' என்று சொன்னார்கள்.

அதைக் கேட்டு மன்னனும் அரசியும் துடிதுடித்தார்கள். அவர்கள் மாந்திரீகர்களிடம் ''அந்த ராட்சஸன் எம் மகளை என்ன செய்வான் என்று பார்த்துச் சொல்லுங்கள்'' என்று கேட்டார்கள். மாந்திரீகர்களும் ''அரசே! மை போட்டுப் பார்த்தால் கடந்த காலத்தில் நடந்ததும் தற்போது நடப்பதும்தான் தெரியும். எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்பது தெரியாது'' என்றார்கள். அதனால் அரசனும் அரசியும் மந்திரியிடம் என்ன செய்வது எனக் கேட்டார்கள். மந்திரியும் ''அரசகுமாரி இருக்குமிடமும் அவளுக்கு என்ன நேரும் என்பதும் தெரிந்து விட்டது. எனவே அவளை ராட்சஸனிடமிருந்து மீட்க வேண்டும். அரசகுமாரியை ராட்சஸனிடமிருந்து மீட்டு வருபவன் யாராக இருந்தாலும் அவனுக்கு அவளை மணம் செய்து வைப்பதாக

—எஸ். சோபினி—



அறிவியுங்கள். இதுதான் அவளை மீட்கும் வழி'' என்றான்.

மன்னனும் அது நல்ல யோசனை தான் என்று அதனை ஏற்று நாடு முழு வதும் அவ்வாறே பறை சாற்றுவித் தான். அந்த அறிவிப்பைக் கேட்டு பல இளைஞர்கள் துணிச்சலுடன் அந்த பயங்கரக்காட்டை நோக்கிச்சென்றார் கள்.

அந்தக் காட்டிற்குள் போவதென் றால் ஒரே ஒரு குறுகலான வழிதான் அதற்கு இருந்தது. அங்கு விசாலபுரி யைச்சேர்ந்த ஒரு மாவீரன் எல்லோருக் கும் முன்னதாகப் போய் அந்த வழி ஆரம்பிக்கும் இடத்தில் நின்று கொண் டான். அவன் அக்காட்டிற்குள் நுழைய முயன்ற ஒவ்வொருவனிடமும் ''இக் காட்டிலுள்ள ராட்சஸனை எதிர்த்துப் போராடி வெற்றி பெறுவது சாதாரண விஷயமல்ல. முதலில் என்னைத் தோற்கடித்து விட்டுப் பிறகு காட்டிற் குள் போங்கள்'' என்று சவால் விடுக்க லானான்.

அந்த மாவீரனை எதிர்த்துத் தோற் கடிக்க ஒருவனாலும் முடியவில்லை. அதனால் நாளுக்கு நாள் அந்தக் காட்டிற்குள் போக வருவோரின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போயிற்று. ஒற்றர்கள் வாயிலாக இந்த விஷயம் மன்னனுக்குத் தெரிந்தது. மன்னன் தன் அமைச்சரிடம் ''யார் இந்த வீரன்? இவன் ஏன் காட்டிற்குள் போக வருபவர்களை எல்லாம் தன் னோடு சண்டை போட அழைக்கி றான்?'' என்று கேட்டான். அமைச்ச ரும் அதுபற்றி விசாரிக்கலாம் என்று கூறி அந்த மாவீரனைப் பற்றித் தகவல் சேகரித்து வர ஒற்றர்களிடம் சொன் னார்.

ஒற்றர்களும் அவனைப் பற்றி விசா ரித்து மன்னனிடம் ''அரசே! அவனது தந்தை ஒரு போர் வீரனாக நம் படை யில் பணிபுரிந்து இறந்தவன். தந்தை இறந்தபின் இவன் எங்கோ போய் பல கலைகளைக் கற்று அரிய சக்திகள் பெற்று வந்திருக்கிறான். இவன் பெயர் விஜயசந்திரன்'' என்று தெரிவித்தார் கள்.

மன்னன் விஜயசந்திரனின் வீட்டிற் குப் போய் அவனது தாயாரைக் கண் டான். மன்னனே தன்னை வீடு தேடி

வந்தது கண்டு அவள் ஆச்சரியப்பட்டாள். அப்போது அவன் ''உன் மகன் ராஜத்துரோகம் செய்கிறான். அதற்கு என்ன காரணம் என்று கேட்கவே நான் வந்தேன்'' என்றான்.

அவளோ ''அரசே! எங்கள் குடும்பம் ராஜ விசுவாசம் கொண்டது. ராஜாவுக்காக எங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவரும் தம் உயிரை அர்ப்பணிக்கத் தயாராக இருக்கிறார்கள். எனவே நீங்கள் கூறுவது சரியல்ல'' என்றாள். மன்னன் அதைக் கேட்டுத் திருப்தி அடையாமல் ''அப்படியானால் என் மகளை விடுவிக்க பயங்கரக் காட்டிற்குள் போகிறவர்களிடமெல்லாம் ஏன் தன்னோடு போரிட்டு வென்று விட்டுப் போகும்படிக் கூறுகிறான்?'' என்று கேட்டான்.

அது கேட்டு அவள் ஆச்சரியப்பட்டு ''அரசே! என் மகன் அரிய சக்தி பெற்றவன். அவனை எதிர்க்கக்கூடியவர்கள் இந்த பூ உலகில் யாருமே இல்லை. ராட்சஸனை எதிர்க்க என்னிடம் ஆசி கேட்டு வந்தான். நானும் எனது ஆசிகளை அளித்து அனுப்பினேன். இப்படி இருக்க என் மகன் தங்களுக்கு துரோகம் செய்ய அரசகுமாரியை விடுவிக்க வருபவர்களை தடுக்கிறான் என்பது சரியல்ல'' என்றாள். மன்னன் அவள் கூறுவது உண்மையே என எண்ணி அரண்மனைக்குத் திரும்பி வந்தான்.

அவன் மந்திரியோடு கலந்து ஆலோசித்து ''இதுவரை நம் நாட்டில்




எந்த வீரனும் விஜய சந்திரனை வெல்ல முடியவில்லை. உண்மையில் அரிய சக்தி கொண்டவன்தான். அவனை நாம் பார்க்க வேண்டும். ஏன் அங்கு வரும் வீரர்களுக்குச் சவால் விடுகிறான் என தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றான். மந்திரியும் ''நாம் மாறு வேடம் அணிந்தே அவனைப் பார்க்கப் போக வேண்டும்'' என்று கூறவே மன்னனும் அவ்வாறே செய்யலாம் என்று சொன்னான்.

மன்னனும் மந்திரியும் கிராமவாசிகள் போல வேடமணிந்து பயங்கரக் காட்டிற்குச் செல்லும் வழியை அடைந்தார்கள். அவ்வழியின் ஆரம்பத்தில் நிற்கும் மாவீரன் விஜய சந்திரனைக் கண்டார்கள். மன்னன்




வீரர்களை விடக் கூடாது என்று தான் இப்படிச் செய்து அவர்களைக் காக்கிறேன்'' என்றான்.

மன்னனும் ''இங்கு வரும் வீரர்களில் யாராவது ஒருவன் அந்த ராட்சஸனை வெல்லக் கூடுமே'' எனவே மாவீரன் அதைக் கேட்டுச் சிரித்து ''என்னைவெல்ல முடியாதவனா ராட்சஸனை வெல்லப் போகிறான்?'' என்றான். அதுகேட்டு மன்னன் ''அப்படியானால் அந்த ராட்சஸனை வெல்லக் கூடியவனே நம் நாட்டில் இல்லையா?'' என்று கேட்டான்.

மாவீரனும் ''ஏன் இல்லாமல்? நான் இருக்கிறேன்'' எனவே மன்னனும் ''அப்படியானால் நீயே அவனை வெல்வது தானே?'' என்றான். மாவீரனும் ''நானே அந்த வேலையைச் செய்யலாம். ஆனால் அதில் ஒரு சிக்கல் உள்ளது'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

அவனிடம் ''அப்பனே! நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான். மாவீரனும் ''நான் விசாலபுரி வீரர்களைப் பரீட்சித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

அதற்கு மன்னன் ''இந்த வேலையை இந்நாட்டு மன்னனோ அல்லது சேனாதிபதியோ தானே செய்ய வேண்டும்? நீ ஏன் செய்கிறாய்?'' என்று கேட்டான். அதற்கு மாவீரனும் ''இந்தக் காட்டினுள் கொடிய ராட்சஸன் ஒருவன் இருக்கிறான். அவன் மிகுந்த பலசாலி. அவனைக் கொல்ல சாதாரண வீரனால் முடியாது. அவன் தன்னை எதிர்க்க வருபவனைப் பிடித்து விழுங்கி விடுவான். இவ்வாறு இறக்க விசாலபுரி

''என் கதையைக் கேட்டால் அது புரியும். என் தந்தை போரில் இறந்த போது எனக்கு வயது ஐந்து. என் தாயார் தினமும் என் தந்தையின் வீரதீரச் செயல்களைக் கூறி வந்தாள். அவரைப் போல சாதாரண வீரனென மடியாமல் தான் அரிய சக்தி பெற்று மாவீரனாகத் திகழ வேண்டுமென்று என் மனதில் படும்படிக் கூறினாள். நானும் என் பதினாறாவது வயது வரை போர்க் கலைகளை நன்கு கற்றேன். அதன்பின் நான் இமயமலைக்குப் போய் அங்குள்ள முனிவர்களிட

மிருந்து அரிய சக்திகளைப் பெற்று வருவதாகக் கூறி என் தாயாரின் ஆசிகளை வேண்டினேன்.

அவளும் ஆசிகள் கூறி விடை கொடுக்கவே நான் இமயமலைக்குப் போய் அங்கு ஒரு முனிவரிடம் மந்திர தந்திரங்களைக் கற்றேன். அவரும் ''நீ அரிய சக்தி பெற்றாய். உன்னை எந்த மனிதனாலும் வெல்ல முடியாது மனிதனல்லாது வேறு சக்தியுடையவனை நீ வெல்ல வேண்டுமானால் உன்தாயாரின் ஆசிகளைப் பெற்ற பின் அவனை எதிர்த்துப் போரிடு. அப்போது உனக்கு வெற்றி கிட்டும்'' என்றார்..

இதன் பிறகு நான் இமயமலையிலிருந்து என் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் சந்திரகாந்தா என்ற பெண்ணை திருடர்கள் கூட்டத் தலைவன் கடத்தி வந்து அவளை அவளது விருப்பத்திற்கு மாறாக அவளது பெற்றோர்கள் முன்னிலையில் அவளை மணக்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தான். நான் தலையிட்டுத் திருடர்களை எல்லாம் அடித்துத் துரத்தினேன்.

அப்போது பெண்ணின் தந்தை ''நான் இந்த நிலையில் என் மகளோடு ஊருக்குத் திருப்பிப் போனால் இவளை யாருமே மணந்து கொள்ள மாட்டார்கள். அதனால் பெரிய மனது செய்து இவளை நீயே மணந்து கொண்டு விடு'' என்று வேண்டினார். சந்திரகாந்தாவும் என்னை மணக்க விரும்பினாள் எனத் தெரிந்து கொண்டேன். அவளது தந்தை கூறுவதில்



நியாயம் உள்ளது என உணர்ந்தேன். ஒரு பெண்ணின் வாழ்வு பாழாகக் கூடாது என்பதாலும் நானும் விரும்பியதாலும் அப்போதே அவளை நான் மணந்து கொண்டேன்.

எங்கள் திருமணமாகி வந்த போது இந்தக் காட்டிலுள்ள ராட்சஸன் எங்களை வழி மறித்து சந்திரகாந்தாவைத் தூக்கிக் கொண்டு ''நான் இவளை என் மாளிகைக்குத் கொண்டு செல்கிறேன். உன்னால் முடிந்தால் விடுவித்துக் கொள்'' என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

ராட்சஸ சக்தியை எதிர்க்க எனக்கு என் தாயாரின் ஆசிகள் வேண்டும். நான் என் தாயாரிடம் போய் எனக்கு மணமானதைக் கூறாமல் ராட்சஸனை எதிர்க்கப் போவதாகக் கூறி ஆசி பெற்று வந்து விட்டேன். ஆனால் நான் ராட்சஸனை இப்போது வென்றால் அரசகுமாரியை மணந்தாக வேண்டும். நான் ஏற்கனவே மணமானவன். எனவே அரசகுமாரியை நான் மணக்க முடியாது. இதுதான் சிக்கல். அதனால் தான் ராட்சஸனைக் கொல்ல முடியாமல் போகிறது. மன்னன் தன் அறிவிப்பைப் சற்று மாற்றி ராட்சஸனைக் கொல்பவனுக்கு நிறையப் பணம் வெகுமதியாக அளிக்கப்படும் என்று பறைசாற்றினால் நான் ராட்சஸனைக் கொன்று அரசகுமாரியையும் என் சந்திரகாந்தாவையும் மீட்க முடியும்''

இவ்வாறு மாவீரன் கூறவே கிராமவாசி வேடத்தில் இருந்த மன்னன் ''நான் தான் மன்னன். உன் நேர்மையைப் பாராட்டுகிறேன். நீ விரும்பிய படியே இப்போதே பறைசாற்றி விடுகிறேன். நீ போய் ராட்சஸனைக் கொன்று உன் மனைவியையும் என் மகளையும் மீட்டு வா'' என்றான். அவ்விதமே பறைசாற்றப்பட்டது.

மாவீரனும் பயங்கரக் காட்டிற்குள் போய் ராட்சஸனைக் கொன்று சந்திரகாந்தாவையும் அரசகுமாரியையும் விடுவித்துக் கொண்டு வந்தான். மன்னன் மாவீரனுக்குப் பரிசுகளைக் அளித்துத் தன் ராணுவத்திலும் ஒரு உயர் பதவியை அளித்தான்.





# யாருக்கு நஷ்டம்?

முத்து மணியூர் வைரச்சுரங்கங்கள் சூழ்ந்தது. அங்கு வைரம் வெட்டும் தொழில் நன்கு நடந்ததால் அவ்வூரில் வீடு வாடகைக்கு கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது அவ்வூருக்குப் புதிதாக வந்த அருணாசலம் வாடகைக்கு வீடு கிடைக்குமா என்று அலைந்தான். கடைசியில் ஒரு வீடும் கிடைத்தது.

ஆனால் வீட்டுச் சொந்தக்காரன் ''நான் ஐநூறு ரூபாய் வாடகைக்கு வீடு கொடுக்கிறேன். ஆனால் ஒரு வருட காலத்திற்குத்தான். பனிரெண்டு மாதங்கள் முடிந்ததும் உடனே வீட்டைக் காலி செய்து விட வேண்டும். இதற்குச் சம்மதித்தால் வீட்டை வாடகைக்குக் கொடுக்கிறேன்'' என்றான். அருணாசலத்திற்கு இந்த நிபந்தனை பிடிக்கவில்லை.

அவன் வீட்டுக்காரனிடம் ''எனக்கும் என் ஊரில் இரண்டு வீடுகள் இருக்கின்றன. அவற்றை வாடகைக்கு விட்டிருக்கிறேன். இப்படி எல்லாம் நிபந்தனை விதிக்கவில்லை. ஒரு பேச்சுக்காகக் கேட்கிறேன். பனிரெண்டு மாதங்கள் முடிந்ததும் நான் வீட்டைக் காலி செய்யாவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்களாம்?'' என்று கேட்டான்.

வீட்டுக்காரனும் ''எனக்கு வீடு அப்போது தேவைப்படும். என் மாப்பிள்ளை மாற்றலாகி இந்த ஊருக்கு வரலாம். அவர் வந்தால் வீடு வேண்டுமே. திடீரென்று வீட்டைக் காலி செய்யச் சொன்னால் குடி இருப்பவன் காலி செய்து விடுவானா? எனவே அவனுக்குக் குறித்த காலத்தில் வீட்டைக் காலி செய்ய வேண்டும் என்பது தெரிய வேண்டும். அதற்காகத்தான் இந்த நிபந்தனை. குடியிருப்பவர் ஒரு வருடத்திற்கும் பின் வீட்டைக் காலி செய்யாவிட்டால் அதற்குப் பின்

—எஸ். வெங்கடராமன்—



மாதா மாதம் இரண்டாயிரம் ரூபாய் வாடகையாகக் கொடுக்க வேண்டும்'' என்றான்.

அப்போது அருணாசலம் ''சரி. ஒரு வேளை உங்கள் மாப்பிள்ளை ஒரு வருடத்திற்குப் பின் இவ்வூருக்கு மாற்றலாகி வராமல் போனால் தொடர்ந்து நானே வாடகை கொடுத்துக் கொண்டு இங்கே இருக்க ஒப்புக் கொள்வீர்களா?'' என்று கேட்டான்.

வீட்டுக்காரனும் ''ஆகா! தாராளமாக இருக்கலாம். ஆனால் அப்போது புதிதாக ஒப்பந்தம் எழுதிக் கொள்ள வேண்டும்'' என்றான். அதற்கும் சம்மதித்து அருணாசலம் முதலில் ஒரு வருடம் மாதம் ஐநூறு ரூபாய் வாடகை கொடுப்பதாக ஒப்பந்தம் எழுதிக் கொடுத்தான். அதன்பின் தன் மனைவி மக்களோடு அங்கு குடி வந்து விட்டான்.

வீட்டுக்காரனும் அருணாசலம் மாதா மாதம் ஒழுங்காக வாடகை கொடுத்து வந்தது கண்டு தன் திருப்தியைத் தெரிவித்தான். அருணாசலமும் ''இவ்வளவு நல்ல வீடு கிடைத்தது என் அதிர்ஷ்டமே. வாழ்நாள் பூராவும் இங்கேயே சுகமாக இருந்து விடலாம் போல இருக்கிறது'' என்றான்.

அது கேட்டு வீட்டுக்காரன் திடுக்கிட்டு ''வாழ்நாள் முழுவதுமா? நம் ஒப்பந்தம் ஒரு வருட காலத்திற்குத் தானே. அது கூட இந்த மாதத்தோடு முடியப் போகிறது. என் நிபந்தனை நினைவில் இல்லையா?'' என்றான். அருணாசலமும் ''அதை நான் மறந்து விடவில்லை. உங்கள் நிபந்தனை நன்கு நினைவில் இருக்கிறது. உங்கள் மாப்பிள்ளைக்கு மாற்றலாகி விட்டதா? உங்களுக்கு வீடு தேவைப்படுகிறதா?'' என்று கேட்டான்.

வீட்டுக்காரனும் ''அதெல்லாம் இல்லை. ஒப்பந்தப்படி பனிரெண்டு மாதங்கள் முடியப் போகின்றன. அதனால் அடுத்த மாதத்திலிருந்து வீட்டு வாடகை அறுநூறு ரூபாய் உனக்கு இஷ்டம் என்றால் புதிதாக ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். இல்லாவிட்டால் வீட்டைக் காலி செய்'' என்றான்.

அது கேட்டு அருணாசலம் திடுக்

கிட்டான். அவன் வீட்டுக்காரனிடம் ''இது அநியாயம். ஒரு வருடத்திற்குப் பின் வாடகையில் நூறு ரூபாய் உயர்வா? கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்கள். இருபத்தைந்து ரூபாய் அதிகம் கொடுக்கிறேன்'' என்றான். வீட்டுக்காரனோ ''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். ஒப்பந்தபடி நடக்கா விட்டால் இரண்டாயிரம் ரூபாய் மாதம் கொடுக்க வேண்டும்'' என்று கூறி விட்டும் போய் விட்டான்.

அருணாசலமோ ''இவன் இஷ்டப்படி வாடகை உயர்த்தினால் நான் அதைக் கொடுத்து விடுவேனா? பார்க்கிறேன் ஒரு கை'' என்று கருவினான்.

அருணாசலத்தின் மனைவியும் ''ஏன் வீண் தகராறு? இந்த ஊரில் வேறு வீடு கிடைக்காது. பேசாமல் புதிய ஒப்பந்தம் செய்து கொள்ளுங்கள்'' என்றான். வீட்டுக்காரன் பிடிவாதமாக இருந்தான். அருணாசலம் பனிரெண்டு மாதம் முடிந்ததும் வீட்டைக் காலி செய்யவில்லை. பதிமூன்றாவது மாதத்திற்கு அவன் வீட்டு வாடகையாக இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தான். அதன்பின் மாதம் அறுநூறு ரூபாய் வாடகைக்கு வீட்டுக்காரனுடன் புதிய ஒப்பந்தம் செய்து கொண்டான்.

அவன் மனைவியும் கணவனிடம் ''இதை ஒரு மாதத்திற்கு முன்பே செய்திருக்கலாமே! இப்போது ஆயிரத்து நானூறு ரூபாய் நஷ்டந்தானே'' என்றாள். அருணாசலமும் ''இல்லை. நாம் இரண்டாயிரம் மாதா மாதம் கொடுப்போம் என வீட்டுக்காரன் எதிர்பார்த்தான். ஆனால் அவனுக்கு மாதா மாதம் ஆயிரத்து நானூறு ரூபாய் நஷ்டம் என்பதைத் காட்டவே இவ்வாறு செய்தேன். அவன் மனம் இப்போது மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்'' என்றான்.

அதைக் கேட்ட அவன் மனைவிக்குத் தன் கணவனைப் பாராட்டுவதா அல்லது கடிந்து கொள்வதா என்று தான் தெரியவில்லை.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்.



Mohantesh C. Morabad



Shrikant Amrute

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஏப்ரல் 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

---

## பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **பேச்சு அறியாத பிராணி.**

இரண்டாவது போட்டோ : **கபடம் அறியாத மழலை.**

பரிசு பெற்றவர் : **திருமதி. ஏ. ஜெயஸ்ரீ, நாசிக்–9.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---